# மூவர் தமிழ் வாசகம்

## இரண்டாம் படிவம்—முதற் பிரிவு

[பொதுப் பகுதி]

OFFICE OF THE REGISTRAR ...
JAN 1954
MADRAS

ஆசிரியர்கள் :
வித்துவான் கோ. வில்வபதி
வித்துவான் எம். எஸ். வேங்கடாச்சாரி
டி. ஆர். ஸ்ரீநிவாசன், பி. ஏ., பி. டி. (தமிழ்)
இந்து தியலாஜிகல் உயர்நிலைப்பள்ளி, சென்னை.

வர்தா பதிப்புக் கழகம்
திருவல்லிக்கேணி : : சென்னை

[விலை ரூ. 1.

# முகவுரை

'**மூவர் தமிழ் வாசகம்**' என்ற இந்நூல் வரிசை அரசியலார் அண்மையில் (26-6-51-இல்) வெளியிட்ட பாடத்திட்ட முறைக்கு ஏற்ப எழுதப் பெற்றதாகும்.

பாடத் திட்டப்படி முதல் மூன்று படிவங்களுக்குத் தாய்மொழிக் கல்வி முறை பொதுப்பகுதி என்றும் சிறப்புப் பகுதி என்றும் இரண்டு பிரிவுகளாக அமைக்கப்பட்டுள் ளது. இரண்டு பகுதிகளிலும் அமையவேண்டிய பாடங் களின் இயல்புகளும், செய்யுட்களின் வகைகளும் தரப்பட் டுள்ளன. இரண்டாம் பகுதி முதற் பகுதியை விடச் சிறிது உயர்ந்த நடையுடையதாய் மாணவர்க்குத் தமிழ்ச் சுவை ஊட்டக் கூடியதாய் இருத்தல் வேண்டும் என்று அறிவிக் கப்பட்டுள்ளது. அம்முறையை நன்கு உளங்கொண்டு இவ்வாசக வரிசை எழுதப் பெற்றுள்ளது.

இந்நூல் இரண்டாம் படிவ மாணவர்க்குரிய பொதுப் பகுதி நூலாகும். இதில் உரை நடையும் செய்யுளும் மாண வர் விரும்பிக் கற்குமாறு எளிய இனிய தமிழ் நடையில் அமைக்கப்பட்டுள்ளன. உரை நடையில் அரசாங்கத் தார் குறிப்பிட்ட அளவுப்படி பாடங்கள் அமைந்துள்ளன. செய்யுட் பகுதியில் சில வரிகள் அதிகமாகத் தரப்பட்டுள் ளன. ஆசிரியர் தம் விருப்பத்திற்கு ஏற்றவாறு பாடங் களைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கு இம்முறை உதவி யாக இருக்கும்.

ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் அருஞ்சொல் விளக்கம், பயிற்சி வினாக்கள், முதலியன தரப்பட்டுள்ளன. ஆங்கில முறையை யொட்டிச் சிறந்த மொழிப் பயிற்சி களும் கட்டுரைப் பயிற்சிகளும் அமைக்கப்பட்டுள்ளன. அரசாங்கத்தாரின் பாடத்திட்ட முறைக்கு ஏற்ப ஒவ் வொரு பாடத்திலும் சிறந்த இலக்கணப் பயிற்சிகள் தரப் பட்டுள்ளன. உரைநடைப் பாடத்தைக் கற்பிக்கும்போதே

இலக்கணப் பகுதியையும் தொடர்புபடுத்திக் கற்பிப்பது சிறந்த நன்மையளிக்கும். மாணவர்கள் இப்பயிற்சிகளைச் செய்து பழகுவதால் அவர்களுடைய தமிழறிவு வளர்ச்சி பெறும்.

செய்யுட் பகுதியிலும் ஆசிரியர் குறிப்பு, அருஞ்சொல் விளக்கம், வினக்கள், பலவிதமான மொழிப் பயிற்சிகள் ஆகியன அளிக்கப்பட்டுள்ளன. இவை தமிழ்ச் செய்யுள் களைக் கற்பதில் மாணவர்க்கு ஆர்வம் ஊட்டும் என்பது எங்கள் எண்ணம்.

இந்நூல் மாணவர்க்குப் பெரும் பயன் விளைக்கும் என்பது எங்கள் எண்ணம். அறிஞர்கள் இந்நூலை ஆதரித்து மேலும் எங்கட்கு இத்துறையில் ஊக்கமளிக்குமாறு வேண்டுகிறோம்.

ஆசிரியர்கள்

## எங்கள் நன்றி

கீழே தரப்பட்டுள்ள பாடல்களையும் படங்களையும் இந் நூலில் வெளியிட அருள்கூர்ந்து இசைவு தந்த அறிஞர்கள் அனைவர்க்கும் எம் வணக்கமும் நன்றியும் உரியன.

1. கலைமகள், ஆசிய ஜோதி—(32 வரிகள்) கவிமணி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள், உரிமை: திரு. குமார சாமிப் பிள்ளை, புத்தேரி.
2. சுதந்திரதேவி, எழுத்தறிவித்தலின் சிறப்பு (8 வரிகள்) பாரதியார்: சென்னை அரசாங்கக் கல்வி இலாகா.
3. தமிழ்த்தாய்—(8 வரிகள்) கரந்தைக் கவியரசு அரங்க. வேங்கடாசலம் பிள்ளை அவர்கள், தஞ்சை.
4. இயற்கை இன்பம்—(12 வரிகள்) கவிஞர். பாரதி தாசனர், புதுவை.
5. இளந்தமிழனுக்கு—(8 வரிகள்) அரசவைக் கவிஞர். நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்கள்.

வர்தா பதிப்புக் கழகம்

# பொருளடக்கம்

## உரைநடைப் பகுதி



## செய்யுட் பகுதி

# மூவர் தமிழ் வாசகம்

## இரண்டாம் படிவம்—பொது



## உரைநடைப் பகுதி

---

### 1. சொல்லும் செயலும்

உலகில் ஒவ்வொருவரும் மனம், மொழி, மெய் இவைகளில் தூய்மை உடையவர்களாக இருத்தல் வேண்டும். மனத்தால் நல்ல எண்ணங்களையே எண்ணுதல் நன்மை தரும். தீய எண்ணங்கள் பிறரைக் கெடுப்பதுடன் தங்களையும் கெடுக்கக் கூடியவையாம். ஆதலின் அவற்றை விலக்குதல் வேண்டும். நாவால் தமக்கும் பிறர்க்கும் நன்மை தரத்தக்க இனிய சொற்களையே கூறுதல் இன்பம் பயக்கும். பொய், குறளை, கடுஞ்சொல், பயனில் சொல் என்பனவாகிய சொல்லில் நேரக்கூடிய குற்றங்களை அறிந்து விலக்குதல் மிகவும் இன்றி யமையாததாகும். எப்போதும் ஒருவன் உண்மையே பேசுதல் சிறந்த பழக்கமாம். உண்மையே உயர் வளிக்கும். உலகில் பலர் உண்மை பேசி உயர்வை அடைந்துள்ளனர்.

உயர்ந்த எண்ணங்களை எண்ணுவதும், உண் மையே பேசுவதும் ஆகிய பண்புகளோடு உயர்ந்த

செயல்களையே ஒருவன் செய்யப் பழகுதல் வேண்டும். தன்னுடைய செயலால் பிறர்க்கு எத்தகைய தீங்கும் உண்டாதல் கூடாது. பிறரை வருத்தியேனும் தான் இன்பமாக வாழ நினைப்பது முறையோ? அங்ஙனம் செய்தால் செய்த அவனுக்கும் தீங்கு தானகவே உண்டாகும். 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்' என்பது முதுமொழி யன்றோ?

சிலர் எத்தனையோ உயர்ந்த கருத்துக்களைப் பேசுவார்கள்; பிறர்க்கும் போதிப்பார்கள். ஆனல் அவைகளைத் தாங்கள் மேற்கொண்டு செய்யமாட்டார்கள். சொல்லுவது எளிது, சொல்லியவண்ணம் செய்வது மிகவும் அரியதாகும். மனம், மொழி, மெய் என்பவற்றில் தூய்மையுடன், நம் முன்னேர்களில் பலர் எண்ணியவாறே சொல்லியும், சொல்லியவாறே செய்தும் என்றும் அழியாப் புகழ்பெற்றனர்.

அரிச்சந்திரன் வரலாறு நீங்கள் அறிந்ததேயாகும். அரிச்சந்திரன் விசுவாமித்திர முனிவருக்குக் கூறிய ஒரு வார்த்தையைக் காப்பதற்காக எவ்வளவு துன்பப்பட்டான்! அவன் நாடு நகரங்களை இழந்து, மனைவி மக்களைத் துறந்து, தானும் ஒரு வெட்டியானுக்கு அடிமையானன். விசுவாமித்திர முனிவர் அரிச்சந்திரனின் மன உறுதியைக் காண்பதற்காக அவன் தன் மனைவி சந்திரமதியையே வெட்டவேண்டிய நிலையை உண்டாக்கினர். கடமை தவருத மன்னவன் தன் மனைவியை வெட்ட முயன்றபோது விசுவாமித்திர முனிவர் அவன் எதிரே தோன்றி, "அரசே! உனக்கு ஏன் இவ்வளவு துன்பம்? எனக்கு நீ தந்த நாட்டைத் தரவில்லை என்று ஒரு பொய் கூறிவிடு; நீ இழந்த நாடு நகரங்களையும், அரசாட்சியையும் திரும்பப் பெறலாம்; இறந்த மகனும் பிழைப்பான்;

சந்திரமதியும் விடுதலை பெறுவாள்,'' என்று கூறினர். அதற்கு அரிச்சந்திரன், ''முனிவரே! நாங்கள் பதியிழந்தோம்; பாலனை இழந்தோம்; நிதியிழந்தோம்; இனி எங்கட்குக் கிடைக்கக்கூடிய மோட்சத்தையே இழக்க நேர்ந்தாலும் நாங்கள் சொன்ன சொல் தவறோம்,'' என்று கூறினன். என்னே அரிச்சந்திரனின் வாய்மை!

இக்காலத்தில் சொல்லும் செயலும் ஒன்றுபட்டு வாழ்ந்தவர்களில் ஒப்பற்றவர் காந்தியடிகளாவர். காந்தியடிகளுக்குச் சத்தியத்தில் அசைக்க முடியாத நம்பிக்கையை ஊட்டியது அரிச்சந்திரன் வரலாறே யாகும். இளமையில் ஒரு சமயம் அவர் அரிச்சந்திரன் நாடகம் பார்க்க நேர்ந்தது. தான் சொன்ன ஒரு சொல்லைக் காப்பதற்காக அரிச்சந்திரன் அடைந்த எண்ணிலாத் துன்பங்களைப் பார்த்துக் காந்தியடிகள் கண்ணீர் வடித்தார். அது முதல் அரிச்சந்திரனே அவருடைய வாழ்க்கைக்கு வழிகாட்டியானன். தாமும் எத்தகைய இடையூறுகள் நேர்ந்தாலும் உண்மை தவறுவதில்லை என்று அவர் உறுதி கொண்டார். அவ்வுறுதியிலிருந்து அவர் இறுதிவரை பிறழவில்லை. அரிச்சந்திரனைப் போலவே காந்தியடிகளும் தம் வாய்மையைக் காக்க அளவற்ற துன்பங்களை அடைந்து வெற்றி பெற்றார்.

காந்தியடிகள் இளமையில் மேல் நாட்டிற்குச் சென்று கல்வி கற்க விரும்பினர். அவருடைய அன்னையார் தம் மகன் மேல்நாட்டுக்குச் சென்றால் நம் நாட்டுப் பழக்கவழக்கங்களை மறந்துவிடுவான்; கெட்ட பழக்கங்களை மேற்கொள்வான் என்று கருதினர். அதனால் அவர் காந்தியடிகள் மேனாட்டுக்குச் செல்வதை விரும்பவில்லை. காந்தியடிகளாரோ

உயர்ந்த படிப்புப் படித்து வந்தால் வாழ்வில் உயர்வு பெறலாம் என்று எண்ணித் தம் அன்னையாரைப் பன் முறை வேண்டினர். தம் திருமகனாரின் ஆர்வத்தைக் கெடுக்க விரும்பாத அன்னையார் அவரிடம் மூன்று வாக்குறுதிகள் கேட்டார். எத்தகைய நிலை ஏற்பட்டா லும் மது அருந்துதல் கூடாது; பிற மாதரை விரும்ப லாகாது; புலால் புசித்தலாகாது என்பனவே அவர் கேட்ட வாக்குறுதிகள். அண்ணல் காந்தியடிகள் அங்ஙனமே வாக்குறுதி தந்து கல்வி கற்க இங்கி லாந்து சென்றார்.

இங்கிலாந்து குளிர் நிறைந்த நாடு என்பது உங்கட்குத் தெரியும். அங்கு மதுவும் மாமிசமும் இல்லாமல் வாழ முடியாது என்பது பலருடைய அநுபவம். காந்தியடிகளையும் அப்பழக்கங்களை மேற் கொள்ளுமாறு பலர் வற்புறுத்தினர். காந்தியடிக ளாரோ அன்னையார்க்கு அளித்த வாக்குறுதிகளைக் காக்க விரும்பி அவற்றை அறவே வெறுத்தார். அதனால் அவருக்கு வேண்டிய உணவு கிடைப்பதும் அரிதாயிற்று. பல நாட்கள்வரை அவர் தாம் ஊரி லிருந்து கொண்டுசென்ற பலவகையான தின் பண்டங்களைத் தின்றே காலம் கழித்தார்; பின்னர், தமக்கு வேண்டிய உணவைத் தாமே சமைத்து உண்டார். ஒரு சமயம் ஓர் ஆங்கிலேயர் காந்தி யடிகளின் உறுதியைக் கண்டு ஏளனம் செய்தார். இறுதிவரை அவரால் தம் உறுதியைக் காக்க முடியாது என்று கூறி வாதாடினர். அதற்கு நம் காந்தியடிகள், "நான் இறுதி வரை என் அன்னையார்க்குக் கூறிய வாக்குறுதிகளைக் காப்பேன்; முடியாத நிலை ஏற்பட் டால் இப்படிப்பையே துறந்து என் தாய்நாடு செல் வேன்," என்று உறுதியாக மொழிந்தார். சொன்ன

சொல்லைக் காப்பதில் காந்தியடிகளுக்கிருந்த மன வுறுதி இதனால் விளங்குமன்றோ!

ஒரு சமயம் காந்தியடிகளார் தமிழ் நாட்டுக்கு வந்தபோது வயலில் வேலை செய்யும் ஏழை மக்களைக் கண்டார். அவர்கள் கட்டத் துணியுமின்றி அரை யாடையுடன் வேலை செய்வதைப் பார்த்துக் கண்ணீர் விட்டார். அன்று முதல் ஆடம்பர ஆடைகளை வெறுத்தார். "நம் நாடு ஏழைகள் நிறைந்த நாடு. ஆதலால் நீங்கள் ஆடம்பரத்தை முற்றிலும் நீக்கி விடுங்கள்; எளிய வாழ்க்கையை மேற்கொள்ளுங் கள்," என்று அடிகள் அனைவருக்கும் உபதேசம் செய்தார். அவ்வுபதேசப்படியே தாமும் அரைக்கு நான்கு முழ ஆடையையும், தோளில் ஒரு சிறிய துண்டையும் தம் உடையாகக் கொண்டு வாழ்ந்து வந்தார்.

அரசியல் காரணமாகக் காந்தியடிகள் ஒருசமயம் இலண்டனுக்குச் செல்ல நேர்ந்தது. அப்போதும் அவர் தம் எளிய உடையிலேயே சென்றார். அவ் வமயம் அரசராயிருந்த ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த் தியை அடிகள் பார்க்கவேண்டிய சந்தர்ப்பம் ஏற் பட்டது. அரசரைக் காண ஆடம்பர உடையணிந்து செல்லவேண்டும் என்று அனைவரும் கூறினர். அதற்குக் காந்தியடிகள், "என் நாடு ஏழை நாடு; என் நாட்டில் உள்ள கோடிக்கணக்கான மக்கள் இந்த எளிய கோலத்திலேயே உள்ளனர். நான் அவர் களுடைய பிரதிநிதி. ஆதலால் நான் ஆடம்பர ஆடையணிவது அவர்கட்குச் செய்யும் பெருந் துரோகமாகும். இந்த நிலையிலேயே அரசரைக் காண்பேன்; முடியாதாயின் நான் அவரைக் காண விரும்பவில்லை," என்று உறுதியாகக் கூறினர்.

அடிகளார் உள்ள உறுதியுடையவர் என்பதற்கும், சொல்லியவாறே செய்யும் உயர் குணம் உடையவர் என்பதற்கும் இதனினும் வேறு சான்று வேண்டுமோ? இறுதியில் அடிகளாரின் உறுதியே வென்றது. அவர் தம் கோலத்திலேயே சென்று அரசரைக் கண்டார். அரசரும் அவரைப் பெரிதும் பாராட்டினர்.

இங்ஙனமாகக் காந்தியடிகள் சொன்னதைப் போல் செய்ய வல்லவர் என்பதற்கும், உண்மையைக் கடைப்பிடிப்பதில் உறுதியுடையவர் என்பதற்கும் எத்தனையோ உதாரணங்கள் கூறலாம். அவர் நம் நாட்டை அடிமைத் தளையிலிருந்து விடுவிப்பதற்கு மேற்கொண்ட விடுதலைப் போரும் சத்தியத்தை அடிப் படையாகக் கொண்ட போரேயன்றோ! காந்தியடிகள் தம் அறப் போராட்டத்திற்குச் **சத்தியாக்கிரகம்** என்றே பெயர் தந்தார். சத்தியத்தை விரும்பிச் செய்யும் போராட்டம் என்பதே அதன் பொருளாகும். அவர் மேற்கொண்ட சத்திய நெறி கத்தியின்றி இரத்த மின்றி நம் நாட்டுக்கு உரிமை வாங்கித் தந்தது என்றால் அதன் பெருமையை எங்ஙனம் புகழ்வது!

இளைஞர்களே! அடிகளாரின் வாழ்வில் கண்ட இந்நிகழ்ச்சிகளை ஊன்றிக் கவனியுங்கள். அவர் உள்ளத்தால் பொய்யாது வாழ்ந்தார்; ஆதலால் இன்று உலகத்தார் உள்ளத்தில் எல்லாம் நீங்காது வாழ்கின்றார். அடிகளாரைப் போலவே மனம், மொழி, மெய்களில் தூய்மையுடையவராய், எண்ணமும், சொல்லும் செயலும் ஒன்றுபட்டவர்களாய் வாழ்வீர் களானால் நீங்களும் அத்தகைய உயர்வை அடைய லாம்; பேரும் புகழும் பெறலாம் என்பதில் ஐயம் உண்டோ!

### அருஞ்சொல் விளக்கம்

குறளை - கோள் சொல்லுதல் ; பண்பு - குணம் ; முது மொழி - பழமொழி ; மனச்சாட்சி - நன்மை தீமைகளைப் பகுத் தறிந்து நன்மையே செய்யுமாறு தூண்டும் மனத்தின் தன்மை ; நெறி - முறை, வழி ; வாக்கு - சொல் ; ஆற்றல் - வல்லமை ; துறந்து - நீங்கி ; பதி - ஊர் ; பாலன் - மகன், லோகிதாசன் ; பிறழவில்லை - மாறவில்லை ; மது - கள் ; புலால் - மாமிசம் ; ஆர்வம் - விருப்பம் ; அண்ணல் - பெருமை பொருந்தியவர் ; அறவே - முற்றிலும் ; பிரதிநிதி - ஒரு கூட்டத்தின் சார்பாகத் தேர்ந்தெடுக்கப்படுபவர் ; துரோகம் - வஞ்சனை ; சான்று - உதார ணம் ; அடிமைத் தளை - அடிமையாகிய கட்டு.

### வினாக்கள்

1. சொல்லில் நேரக்கூடிய குற்றங்கள் எவை ?

2. ' முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும் ' என்னும் பழமொழியால் நீங்கள் அறிந்துகொண்டது யாது ?

3. மனம், மொழி, மெய்—இவைகளுக்கு உள்ள தொடர்பை விளக்குக.

4. செல்வாக்கு என்றால் என்ன ?

5. அரிச்சந்திரன் சொன்னசொல் தவறாதவன் என்பதனை விளக்கும் நிகழ்ச்சி யாது ?

6. காந்தியடிகள் உண்மையே பேசுவதென்று எப்போது உறுதி கொண்டார் ?

7. காந்தியடிகள் அன்னையாருக்கு அளித்த வாக்குறுதிகள் எவை ?

8. ' இப் படிப்பையே துறந்து என் தாய்நாடு செல்வேன்' —சந்தர்ப்பம் கூறுக.

9. காந்தியடிகள் சொல்லியவாறே செய்பவர் என்பதை விளக்க ஓர் உதாரணம் தருக.

10. சத்தியாக்கிரகம் என்றால் என்ன ? அதன் பெருமையை விளக்குக.

### மொழிப் பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் அமைக்க :—முதுமொழி, ஒன்றோடொன்று, மனச்சாட்சி, செல்வாக்கு, வாக்குறுதி, அறவே, தினசரி, ஆடம்பரம், பிரதிநிதி, சான்று.

2. எதிர்ப்பதம் தருக :—உண்மை, நன்மை, குற்றம், இன்பம், இயற்கை, பழிப்பர், உயர்ந்தோர், போற்றுவர்.

3. பிரித்தெழுதுக :—கடுஞ்சொல், முற்பகல், முதுமொழி, அளவற்ற, எண்ணிலா.

4. சேர்த்தெழுதுக :—பல + முறை ; மேல் + நாடு ; நிதி + இழந்தோம் ; மனம் + உறுதி ; ஒன்றேடு + ஒன்று.

5. சொல்லியவண்ணம் செய்த மற்றெரு பெரியவரின் வரலாற்றைப் பத்து வரிகளில் எழுதுக.

6. அரிச்சந்திரன் கதையைக் கேட்டு அறிந்துகொள்க.

## இலக்கணப் பயிற்சி

1. உலகில் பலர் உண்மை பேசி உயர்வை அடைந்துள்ளனர் ?

2. பிறரை வருத்தியேனும் தான் இன்பமாக வாழ நினைப்பது முறையோ ?

3. நீங்கள் எளிய வாழ்க்கையை மேற்கொள்ளுங்கள்.

4. என்னே அரிச்சந்திரனின் வாய்மை !

இவ்வாக்கியங்களைக் கவனியுங்கள். முதல் வாக்கியம் ஒரு செய்தியை அறிவிக்கிறது. இதுபோன்ற வாக்கியங்கள் **செய்தி வாக்கியங்களாம்.**

இரண்டாவது வாக்கியம் கேள்விப் பொருளைத் தருகிறது. இவ்வகையான வாக்கியங்கள் **விஞ வாக்கியங்கள்** எனப்படும்.

மூன்ருவது வாக்கியம் ஒரு தொழிலைச் செய்யுமாறு ஏவுகிறது. இவ்வாறு கட்டளைப் பொருளில் வரும் வாக்கியங்கள் **கட்டளை வாக்கியங்கள்** எனப்படும்.

நான்காம் வாக்கியம் வியப்பைத் தெரிவிக்கிறது. இதுபோன்றே இரக்கம், அச்சம், மகிழ்ச்சி போன்ற உணர்ச்சிகளை அறிவிக்கும் வாக்கியங்கள் **உணர்ச்சி வாக்கியங்கள்** எனப்படும்.

மேற்கூறிய வாக்கியங்களில் பல சொற்கள் தொடர்ந்து வந்துள்ளன. இவை முடிந்த கருத்துக்களைத் தெரிவிக்கின்றன. இத்தகைய **கருத்து முடிந்த சொற்றெடர்கள் வாக்கியங்கள் எனப்படும்.**

நான்கு வகை வாக்கியங்கள் ஒவ்வொன்றுக்கும் இரண்டு உதாரணங்கள் எழுதிப் பழகுக.

# 2. விதியை மதியால் வெல்லலாம்

வெகுகாலத்துக்கு முன் நம் இந்தியநாட்டில் வீரமும் புகழும் விளங்க அரசாண்ட மன்னர்களில் **விக்கிரமாதித்தன்** ஒருவனுவான். விக்கிரமாதித்தன் என்ருல் வலிமையில் சூரியனைப் போன்றவன் என்பது பொருள். அவனுடைய பெயருக்கு ஏற்ப அவன் பெரிய வீரனுகவே விளங்கினுன். விக்கிரமாதித்தன் கல்வி கேள்விகளிலும் அறிவு ஆற்றல் களிலும் சிறந்து அக்காலத்தில் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாமல் புகழ்பெற்று வாழ்ந்தான். இத்தகைய சிறந்த வேந்தனுடைய ஆற்றலையும் செங்கோற் சிறப்பையும் விளக்கத் தமிழ்நாட்டில் '**விக்கிரமாதித்தன் கதை**' என்று ஒரு நூல் வழங்கி வருகிறது. அந்நூலில் விக்கிரமாதித்தனுடைய வீரச்செயல்கள் பல மிகவும் அழகாகவும் எளிமையாகவும் எழுதப்பட்டுள்ளன. அவைகளில் கீழ்வரும் கதையும் ஒன்ருகும்.

ஒரு சமயம் விக்கிரமாதித்தனும், அவன் அமைச்சனுகிய **பட்டி** என்பவனும் தங்கள் அரசாட்சிக்கு ஏற்ற ஓரிடத்தைத் தேர்ந்தெடுத்து அங்குத் தலைநகரத்தை அமைக்க விரும்பிச் சுற்றுப் பிரயாணம் செய்தனர். அவர்கள் பல இடங்களைச் சுற்றிப் பார்த்தும் அவர்கள் விரும்பியவாறு இடம் கிடைக்கவில்லை. அதனுல் இருவரும் மனம் சோர்ந்து ஒரு குளக்கரையை வந்தடைந்தனர். அக்குளத்தில் பளிங்கு போன்ற தூய நீர் நிரம்பியிருந்தது. குளக்கரையில் ஒரு பெரிய ஆலமரமும் குளிர்ந்த நிழலைக் கொடுத்துக் கொண்டு விளங்கியது. அதன் அருகில் காளிகோயிலொன்றும் இருந்தது. இவ்வளவு அழகான இடமாக

இருந்தமையால் அவ்விடம் அவர்களுக்கு மிகவும் மகிழ்ச்சியை அளித்தது. இருவரும் குளத்தில் இறங்கி நீர் பருகி நீர்வேட்கையைத் தணித்துக் கொண்டு இளைப்பாறுவதற்காக மரநிழலில் தங்கினர்.

அந்த ஆலமரத்தில் ஒன்றுக்கொன்று சிறிது இடம் விட்டு ஏழு உறிகள் கட்டப்பட்டிருந்தன. அவற்றைப் பார்த்த அவ்விருவரும் ஆச்சரியம் அடைந்தனர். இவ்வாறு கட்டப்பட்டிருப்பதில் ஏதோ விசேடம் இருக்க வேண்டும் என்று எண்ணிய அவர் கள் அதைப்பற்றிச் சிந்தித்தவாறே கோயிலை அடைந் தனர். கோயில் வாயிலில் ஒரு கல் நடப்பட்டிருந்தது. அக்கல்லில், 'இக்குளக்கரையில் உள்ள ஆலமரத்தில் கட்டப்பட்டுள்ள ஏழு உறிகளையும் ஒரே வெட்டில் துண்டாகுமாறு வெட்டி அவ்வுறியிலிருந்து தலை கீழா கப் பாய்ந்து குளத்தின் நடுவில் நடப்பட்டுள்ள வேலின் முனையில் தன் தலைபடுமாறு வீழ்கின்றவர் களுக்குக் காளிதேவி தரிசனம் தந்து வேண்டிய வரங் களையும், இங்கு மறைந்து கிடக்கும் அளவற்ற செல் வத்தையும் அளிப்பாள்' என்று பொறிக்கப் பட்டிருந் தது. அதைக்கண்ட விக்கிரமாதித்தன் மிகவும் உற் சாகம் அடைந்து தான் அவ்வாறு செய்து தன் வீரத்தை விளக்கத் துணிந்தான். பட்டியும் அதற்கு இசைந்தான்.

இருவரும் குளக்கரையை அடைந்தனர். விக்கிர மாதித்தன் தனித்தனியாக இருக்கும் உறிகளைக் கண்டு இவற்றை எங்ஙனம் ஒரே வெட்டில் துண்டாகுமாறு வெட்டுவது என்று சிந்தித்தான். பட்டி, "மரத்தில் ஏறி ஓர் உறியில் காலைவைத்து வேகமாகச் சுற்றினால் எல்லா உறிகளும் ஒன்றாகச் சேர்ந்து முறுக்கேறி நிற்கும்; உடனே ஒரே வெட்டில் அவற்றைத் துண்

டாக்கி, வேலின் முனையில் தலை படுமாறு விழ வேண்டும்,'' என்று ஆலோசனை கூறினன். விக்கிர



விக்கிரமாதித்தன் தலைகீழாய் விழுதல்

மாதித்தன் பட்டி கூறிய கருத்தை ஏற்று மரத்தில் ஏறி ஏழு உறிகளையும் முறுக்கி ஒரே வெட்டில் துண்டாக்கி அங்கிருந்து தலைகீழாகப் பாய்ந்து வேலின் முனையை நோக்கிவந்தான். அப்போது காளிதேவி காட்சியளித்து வேலின் முனையில் அவன் தலை படாதவாறு கைகளால் தாங்கிக் கரை சேர்த்தாள். விக்கிரமாதித்தனும் பட்டியும் அன்னையைக் கண்டு ஆனந்தங் கொண்டு வணங்கி எழுந்து வாழ்த்தி நின்றனர். காளிதேவி, '' விக்கிரமாதித்த வேந்தனே ! உன் வீரத்தைக் கண்டு மகிழ்ந்தேன் ; நீ வேண்டிய வரம் கேள்,'' என்று அருளினள். விக்கிரமாதித்தன், ''தாயே நான் தங்க

ளருளால் இங்கு ஒரு பெரிய பட்டணம் அமைத்து அரசாள விரும்புகின்றேன்; தாங்கள் எனக்குத் துணையாக இருந்து எல்லாவகைகளிலும் உதவுவதோடு நான் ஆயிரம் ஆண்டுகள் வரை அரசாளவும் வரம் தரல் வேண்டும்,'' என்று வேண்டிக் கொண்டான். காளிதேவியும் அங்ஙனமே ஏறிய சிங்காதனம் இறங்காமல் ஆயிரம் ஆண்டுகள் அரசாள வரம் தந்து, தன் பீடத்தின் கீழிருந்த அளவற்ற செல்வத்தையும் வழங்கி மறைந்தனள்.

விக்கிரமாதித்தனும் பட்டியும் மனம் மிக மகிழ்ந்து, காளிதேவி அருளிய பெருஞ் செல்வத்தைக் கொண்டு மிகவும் அழகான ஒரு நகரத்தை அங்கு நிருமாணித்தனர். பல நாடுகளிலிருந்தும் மக்கள் பெருந் திரளாக வந்து அந்நகரில் குடிபுகுந்து இன்பமாக வாழத் தொடங்கினர். அந்நகரம் காளிதேவியின் கருணையினுல் அமைந்ததாதலின் அத்தேவியின் பெயராலேயே '**உஜ்ஜயினி பட்டணம்**' என்று வழங்கப்பட்டு வந்தது. விக்கிரமாதித்தன் பட்டியுடன் காளிதேவியின் வாக்குப்படி சிறப்பாக அரசாண்டு வந்தான்.

பட்டி விக்கிரமாதித்தன் மனம் விரும்பியவாறு எல்லாச் செயல்களையும் செய்துவந்தான். எனினும் அவன் மனத்தில் சிறிது வருத்தம் இருந்தது. விக்கிரமாதித்தன் காளிதேவியிடம் வரம் கேட்கும்போது தனக்காக ஒன்றும் கேட்காமையால் அவன் மனம் மிகவும் புண்பட்டிருந்தது. ஒரு நாள் பட்டி நள்ளிரவில் காளிதேவியின் கோயிலுக்குச் சென்ருன். அப்போது காளிதேவி வழக்கம்போல் நகர்க் காவலுக்காக வெளியே சென்றிருந்தாள். பட்டி அதுவே தக்க சமயம் என்று அறிந்து, கோயிலினுட் புகுந்து

கதவைத் தாழிட்டுக் கொண்டான். நகர்க் காவலிலிருந்து திரும்பிய காளிதேவி தன் கோயில் தாழிடப்பட்டிருப்பது கண்டு சினந்து, ''தாழிட்டு உள்ளிருப்பவர் யார்?'' என வினவினுள். ''தாயே! பட்டியாகிய நான்தான் உள்ளிருக்கின்றேன்; எனக்குத் தாங்கள் ஒரு வரம் அளிக்கவேண்டும். அளிப்பதாக வாக்களித்தால்தான் கதவைத் திறப்பேன்,'' என்று அவன் கூறினுன். காளிதேவி கருணைகொண்டு என்ன வரம் வேண்டும் என்று வினவினுள். பட்டி கதவைத் திறந்து வந்து தேவியை வணங்கித் தனக்கு இரண்டாயிரம் வருடம் ஆயுள் தருமாறு வேண்டினுன். காளிதேவி அவன் கருத்தை உணர்ந்து, விக்கிரமாதித்தன் தலையை வெட்டிவந்து தன் பலிபீடத்தில் வைத்தால் அங்ஙனமே தருவதாகக் கூறினுள். பட்டியும் அதற்கு இசைந்தான்.

உடனே பட்டி விரைந்து அரண்மனை சென்றுன். விக்கிரமாதித்தன் நன்ருக உறங்கிக் கொண்டிருந்தான். பட்டி தன் உடைவாளால் அவன் தலையைத் துணித்தெடுத்து வந்து காளிதேவியின் பலிபீடத்தில் வைத்து வணங்கி நின்ருன். அதுகண்ட அன்னை காளி திடுக்கிட்டாள். விக்கிரமாதித்தன்மேல் பேரன்பு கொண்ட பட்டி அச்செயல் புரியத் துணியான் என்று கருதியே அவ்வாறு கூறினுள். எதிர்பாராதவாறு பட்டி செய்த செயலைக்கண்டு வருந்திய அவள் தான் கூறியவாறே பட்டிக்கு இரண்டாயிரம் ஆண்டுகள் ஆயுள் அளித்தாள். அவ்வரத்தைப் பெற்றவுடன் பட்டி கலகல என்று சிரித்தான். காளிதேவி சிரித்ததற்கு என்ன காரணம் என்று வினவினுள். பட்டி ''தாயே! தாங்கள் என் தலைவனுகிய விக்கிரமாதித்தனுக்கு ஆயிரம் ஆண்டுகள் அரசாளுமாறு வரம் தந்தீர்கள். ஆனல்

அவன் ஆயுள் இதோ அழிந்து விட்டது. தற்போது எனக்கு இரண்டாயிரம் ஆண்டுகள் ஆயுள் தந்துள்ளீர்கள். எனக்களித்த வரமும் இவ்வாறு தான் ஆகுமோ என்று எண்ணிச் சிரித்தேன்,'' என்று கூறினுன்.

காளிதேவி பட்டியின் நுண்ணறிவைக் கண்டு வியந்து, திருநீறும் ஒரு பிரம்பும் கொடுத்து விக்கிரமாதித்தன் தலையை உடலில் பொருத்தித் திருநீறு தெளித்துப் பிரம்பால் தட்டினுல் உயிர் பெறுவான் என்று அருள் செய்தாள். பட்டி மகிழ்ச்சியுடன் அவைகளைப் பெற்றுச்சென்று அங்ஙனமே செய்து விக்கிரமாதித்தனை உயிர் பெற்றெழச் செய்தான்.

உயிர் பெற்றெழுந்த அரசன் ஒன்றும் அறியாதவனுய்த் திகைத்தான். அப்போது பட்டி நடந்த நிகழ்ச்சிகள் யாவற்றையும் விளக்கமாகக் கூறித் தான் காளிதேவியிடம் இரண்டாயிரம் ஆண்டுகள் உயிரோடு வாழுமாறு வரம்பெற்று வந்ததையும் நவின்ருன். விக்கிரமாதித்தன் அதுகேட்டு, ''பட்டி! நான் ஆயிரம் வருடங்கள்தானே அரசாள வரம் பெற்றேன். நீ இரண்டாயிரம் ஆண்டுகள் ஆயுள் பெற்ருயே; இதற்கு யாது செய்யலாம் ?'' என்று கேட்டான்.

மதிமிக்க மந்திரியாகிய பட்டி, ''அரசே! அதனைக் கவனிக்காமால் நான் வரம் கேட்பேனு ! காளிதேவி தங்கட்கு ஆயிரம் ஆண்டுகள் அரசாள வரம் கொடுத்தாள். நான் என் அறிவினுல் தங்கட்கு மற்றும் ஓர் ஆயிரம் வருடங்கள் ஆயுள் தருகின்றேன்,'' என்று கூறினுன். அதுகேட்டு வியந்த விக்கிரமாதித்தன் அஃதெவ்வாறு என்று கேட்டான். பட்டி, ''வேந்தே! தேவி தங்கட்கு ஏறிய சிங்காதனம் இறங்காமல் ஆயிரம் ஆண்டுகள் அரசாளுமாறு வரமளித்தனள். தாங்கள் ஆறுமாதங்கள் நாட்டிலிருந்து அரசாளுங்

கள்; அடுத்த ஆறுமாதம் இந்நாட்டை விட்டுக் காட்டில் சென்று வாழுங்கள். அங்ஙனம் செய்வதால் நீங்கள் காளிதேவியின் வரத்தின்படி ஆயிரம் ஆண்டு கள் அரசாள்வதற்கு இரண்டாயிரம் வருடங்கள் ஆகு மன்ருே! ஆகவே இங்ஙனம் இருவரும் இரண்டாயிரம் ஆண்டுகள் உயிர்வாழலாம்,'' என்று கூறினுன்.

பட்டியின் நுண்ணறிவைக் கண்டு மகிழ்ந்த விக்கிரமாதித்தன் அது முதல் நாட்டில் ஆறுமாதங் களும், காட்டில் ஆறுமாதங்களுமாக வாழத் தொடங்கி ஞன். இவ்வாறு அவன் காட்டில் வாழ்ந்த காலங் களில் செய்த வீரச்செயல்கள் அளவற்றனவாம். அவையே இன்றளவும் மக்களால் போற்றிப் புகழப் பட்டுக் கதைகளாகப் படிக்கப்பட்டு வருகின்றன. அந்தக் கதைகள் இன்றும் தமிழ்நாட்டுக் கிராமங்களில் வாழ்கின்ற மக்கட்கு இன்பப் பொழுது போக்குக் கேற்ற இன்சுவை அமுதமாக இனிக்கின்றன.

### அருஞ்சொல் விளக்கம்

மிக்கார் - மேம்பட்டவர்; அமைச்சன் - மந்திரி; பளிங்கு - வெண்மையும் தூய்மையும் உடைய ஒருவகைக் கல்; பருகி - குடித்து; நீர் வேட்கை - தண்ணீர்த் தாகம்; விசேடம் - சிறப்பு; பொறித்தல் - செதுக்குதல்; வேந்தன் - அரசன்; சிங்க + ஆதனம் = சிங்காதனம்: சிங்கங்கள் சுமப்பது போலச் செய்யப் பட்ட ஆசனம்; பீடம் - ஆசனம்; நிருமாணித்தனர் - ஏற்படுத் தினர்; திரள் - கூட்டம்; நள்ளிரவு - நடு இரவு; பலிபீடம் - பலி யிடுவதற்கென அமைந்த இடம்; உடைவாள் - உடையில் சேர்த் துக் கட்டியுள்ள சிறிய வாளாயுதம்; நுண்மை + அறிவு = நுண் ணறிவு - கூர்மையான புத்தி; நவின்ருன் - கூறினுன்.

### வினுக்கள்

1. விக்கிரமாதித்தன் என்ற சொல்லின் பொருள் யாது?
2. விக்கிரமாதித்தனும் பட்டியும் குளக்கரையில் கண்ட காட்சியைக் குறிப்பிடுக.

3. காளி கோயிலில் கல்லில் பொறிக்கப்பட்ட செய்தியைக் கூறுக.

4. விக்கிரமாதித்தன் புரிந்த வீரச்செயல் யாது ?

5. காளிதேவி விக்கிரமாதித்தனுக்கு அளித்த வரம் என்ன?

6. பட்டி இரண்டாயிரம் ஆண்டுகள் வாழ வரம் பெற்றது எங்ஙனம் ?

7. காளிதேவி வரங் கொடுத்தபோது பட்டி சிரித்தமைக்குக் காரணம் என்ன ?

8. பட்டி விக்கிரமாதித்தனுக்கு இரண்டாயிரம் ஆண்டுகள் ஆயுள் அளித்தது எவ்வாறு ?

9. 'என் அறிவினல் தங்கட்கு மற்றும் ஓர் ஆயிரம் ஆண்டுகள் ஆயுள் தருகின்றேன்'—சந்தர்ப்பம் கூறுக.

10. இக்கதையால் நீ அறிந்து கொண்ட நீதி யாது ?

## மொழிப் பயிற்சி

1. வாக்கியங்களில் பயன்படுத்துக :—கல்விகேள்வி, அறிவாற்றல், ஒப்பாரும் மிக்காரும் இல்லாமல், வேட்கை, ஒன்றுக்கொன்று, தனித்தனியாக, ஆலோசனை, நிருமாணித்தனர், திரளாக, புண்பட்டு, எதிர்பாராதவாறு, கலகல, நுண்ணறிவு, பொழுதுபோக்கு.

2. எதிர்ப்பதம் கூறுக :—வலிமை, வீரம், விரும்பி, குளிர்ந்த, வேகமாக, நள்ளிரவு, ஏறிய, சோர்வு.

3. பிரித்து எழுதுக :—செங்கோல், முறுக்கேறி, உள்ளிருக்கின்றேன், பேரன்பு, வீரச்செயல், இன்சுவை.

4. சேர்த்து எழுதுக :—குளம் + கரை, பெருமை + திரள், நள் + இரவு, அரசு + ஆள, அறிவு + ஆற்றல்.

5. 'பட்டி கலகல என்று சிரித்தான்' இதைப்போல இரட்டைச்சொற்களை அமைத்து வேறு சில வாக்கியங்களை எழுதுக.

6. 'விதியை மதியால் வெல்லலாம்' என்ற இப்பாடத் தலைப்புக்கு ஏற்ற வேறு ஒரு கதையைக் கூறுக.

## இலக்கணப் பயிற்சி

1. இருவரும் குளக்கரையை அடைந்தனர்.

2. அவ்விடம் அவர்களுக்கு மிகவும் மகிழ்ச்சியை அளித்தது. இவைகள் முடிந்த பொருள்களைத் தருவனவாதலின் வாக்கியங்களாம். இவற்றில் 'இருவரும்' 'அவ்விடம்' என்ற சொற்களே இவ்வாக்கியங்கள் உண்டாவதற்குக் காரணமாக இருக்கும் சொற்களாம். இங்ஙனம் ஒரு வாக்கியம் உண்டாவதற்குக்

காரணமாய் இருக்கும் சொல் எழுவாய் எனப்படும். எழுவாய் பெரும்பாலும் பெயர்ச் சொல்லாகவே இருக்கும்.

அடைந்தனர், அளித்தது என்ற சொற்கள் எழுவாயின் தொழிலைத் தெரிவித்து வாக்கியத்தின் கருத்துக்களை முடிக்கும் சொற்களாக உள்ளன. எழுவாய் செய்யும் தொழிலைத் தெரிவிக்கும் சொல் பயனிலை எனப்படும்.

குளக்கரையை, மகிழ்ச்சியை என்ற சொற்கள் எழுவாய் செய்த செயலின் பயனை அடைந்த பொருள்களாம். அவை செயப்படு பொருள்கள் எனப்படும். எழுவாய் செய்த தொழிலின் பயனை ஏற்று வரும் சொல் செயப்படு பொருளாம். செயப்படு பொருள் எப்பொழுதும் இரண்டாம் வேற்றுமையிலேயே வரும்.

எழுவாய், பயனிலை, செயப்படு பொருள் என்ற இம்மூன்றும் வாக்கிய உறுப்புக்கள் எனப்படும். சில வாக்கியங்கள் செயப்படு பொருள் இல்லாமலும் வரும். (உ - ம்.) வளவன் நடந்தான்.

இராமன் நல்லவன்.
தமிழரசி படித்தாளா ?
செங்குட்டுவன் பாடினன்.

இவ் வாக்கியங்களில் பயனிலைகள் யாவை ? நல்லவன், படித்தாளா ? பாடினன் என்பனவே பயனிலைகளாம். நல்லவன் என்பது பெயர்ச்சொல் ; படித்தாளா என்பது வினைச்சொல் ; பாடினன் என்பது வினைச்சொல். பயனிலை இம்மூவகையாகவும் வரலாம்.

வாக்கிய உறுப்புக்களைக் கண்டறியும் முறை :— முதலில் வாக்கியத்தின் கருத்து முடிவதைக் கொண்டு பயனிலையை அறிந்துகொள்க. பயனிலையை அடுத்து யார் ? எது ? எவை ? என்று வினவினால் அதற்கு வரும் விடை எழுவாயாம். யாரை ? எதை ? எவற்றை ? என்று வினவினால் அதற்கு வரும் விடை செயப்படு பொருளாம்.

கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள வாக்கிய உறுப்புக்களை எடுத்து எழுதுக :—

(1) அக்குளத்தில் பளிங்குபோன்ற தூய நீர் நிரம்பியிருந்தது.

(2) காளிதேவி அளவற்ற செல்வத்தை வழங்கினள்.

(3) நான் ஆயிரம் ஆண்டு தானே அரசாள வரம் பெற்றேன்.

(4) நீ இரண்டாயிரம் ஆண்டுகள் ஆயுள் பெற்றாய்.

# 3. சிறுவர் செஞ்சிலுவைச் சங்கம்

(உரையாடல்)




[மாலை ஏழு மணி. அழகப்பர் செய்தித் தாள் படித்துக் கொண்டு சாய்வு நாற்காலியில் அமர்ந்திருக்கிறார். அவருடைய மைந்தர்களாகிய இளங்கோவும் முருகனும் பள்ளிக்கூடத்தி லிருந்து வருகிறார்கள்.]

**அழகப்பர் :** முருகா! பள்ளிக்கூடத்திலிருந்து வருவதற்கு ஏன் இவ்வளவு நேரம்

**முருகன் :** அப்பா! இன்று எம் சிறுவர் செஞ்சிலுவைச் சங்கத்தின் ஐந்தாம் ஆண்டு விழா. கூட்டம் முடிவதற்கு இவ்வளவு நேரமாயிற்று.

**அழ :** ஆண்டு விழாவிற்குத் தலைமை வகித்தவர் யார்? உங்கள் நிகழ்ச்சி நிரலில் குறிப்பிடத்தக்க அம்சங்கள் எவை?

முரு : நமது மாவட்ட மருத்துவ அதிகாரி தலைமை தாங்கினர். எம் தலைமை ஆசிரியர் வரவேற்புரையை முடித்த பின் மூன்ரும் அமைப்பு மாணவன் 'நோய்க்கு இடங்கொடேல்' என்பது பற்றிப் பேசினன். மற்ருெரு சிறுமி 'புத்தர்பிரான் கருணை' என்பது பற்றி இனிய ஒரு பாடல் பாடினள். இறுதியில் 'தீபந்தாங்கிய சீமாட்டி' என்னும் சிறு நாடகத்தை நடத்திேனும். தலைவர் எங்கள் குழுவைப் பலபடப் பாராட்டினர். எங்கள் 'கவுன் சிலர்' நன்றிகூறக் கூட்டம் இனிதாக முடிந்தது.

அழ : 'கவுன்சிலரா ?' அவர் யார் ?

இள : அவர் எங்கள் ஆசிரியர்தாம். அவர் எங்கள் செஞ்சிலுவைக் குழுவை நடத்துகிருர். அவரைக் 'கவுன்சிலர்' என்றே அனைவரும் அழைக்கிருர்கள்.

அழ : உங்கள் சங்கத்தின் நோக்கங்கள் எவை என்று உனக்குத் தெரியுமா ?

இள : எனக்குத் தெரியுமே! சுகாதாரத்தை நன்கு பாதுகாத்தல், ஏழை எளியவர்களுக்கும் நோயாளிகளுக்கும் உதவுதல், உலக நாடுகளுக்கிடையே நட்பை வளரச் செய்தல் ஆகியவைகளே எங்கள் சங்கத்தின் முக்கியமான நோக்கங்களாம்.

அழ : அவற்றை எவ்வாறு நீங்கள் நிறைவேற்றுகிறீர்கள் ?

முரு : எங்கள் குழுவிலுள்ள அங்கத்தினர்கள் நான்கு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளார்கள். ஒவ்வொரு பிரிவினரும் மாதந்தோறும் ஒவ்வொரு கடமையை ஏற்று நடத்துகிருேம்.

இள : அப்பா! எங்கள் பிரிவினர் சுகாதாரத்தைப் பாதுகாக்கும் வேலையை இம்மாதம் ஏற்றுக்

கொண்டிருக்கிறோம். பள்ளிக்கூடத்தின் சுற்றுப் புறங்கள், பாடசாலைத் தோட்டம், வகுப்பறைகள், சுவர்கள் முதலியன சுத்தமாக இருக்கின்றனவா ? மாணவர்கள் சுத்தமான உடைகளைத் தரித்து, தலைவாரிக் கொண்டு வருகின்றனரா என்று நாங்கள் கவனிக்க வேண்டும். மாணவர்களின் பற்கள், நகம் முதலியன சுத்தமாக உள்ளனவா என்று கவனிப்பதும் எங்கள் கடமைகளாம்.

முரு : எங்கள் பிரிவினர் மருத்துவச் சாலைகளிலுள்ள நோயாளிகளைப் பார்த்து, இனிய கதைகள் கூறியும், படங்களைக் காட்டியும் அவர்களை மகிழச் செய்வோம். தள்ளாத நோயாளிகளை மருத்துவச் சாலைகளுக்கு அழைத்துச் சென்று மருந்து வாங்கித் தருவதும் எங்கள் வேலையேயாம்.

அழ : சுகாதாரத்தை வளர்ப்பதற்கு நீங்கள் என்ன செய்கிறீர்கள் ?

முரு : சுகாதாரத்தை வற்புறுத்தும் பழமொழிகளை வகுப்பறைகளில் அழகாக எழுதி வைக்கிறோம். அப்பழமொழிகள் எழுதிய அட்டைகளை எடுத்துக் கொண்டு அவ்வப்பொழுது நகர வீதிகளில் ஊர்வலமாக வருவோம். எங்கள் ஆசிரியர் கற்பித்துள்ள சுகாதாரப் பாடல்களை அவ்வமயம் பாடுவதும் உண்டு.

இள : சென்ற மாதம் நாங்கள் வயலூருக்குச் சென்று கிராமத்தினருக்குச் சுகாதாரத்தின் அவசியத்தைப் பல படங்களின் மூலமாயும் கதைகள் வாயிலாகவும் விளக்கிக் கூறினோம். நாங்களே சில தெருக்களைச் சுத்தம் செய்தும், ஏழைச் சிறுவர்களின் தலையை வாரியும், உடைகளைத் தோய்த்துக் கொடுத்தும் தொண்டுகள் புரிந்தோம்.

முரு : எங்கள் பள்ளிக்கூடத்திலுள்ள ஏழைச்

சிறுவர்களுக்குப் பாடப்புத்தகங்கள், தேங்காய் எண்ணெய், சவுக்காரம், முதலியவற்றையும் கொடுத்து உதவுகிறோம். சில சமயங்களில் உடைகளும் உணவும் கூட அளிக்கிறோம்.

அழ: இவற்றிற்கெல்லாம் செலவிற்குப் பொருள் வேண்டுமே; அதற்கு என்னசெய்கிறீர்கள்?

முரு: எங்கள் குழுவில் மற்றொரு பிரிவினர் தோட்டவேலை செய்கிறார்கள். தோட்டத்தில் பயிராகும் காய்கறிகளை விற்றுக் கிடைக்கும் பணத்தைச் சேமித்து வைக்கிறோம். தரும சிந்தனையுடைய சிலரும் நன்கொடையாகப் பணம் உதவுகின்றனர். சில சமயங்களில் நாடகங்கள் நடித்தும் நாங்கள் நிதி திரட்டுவதுண்டு.

அழ: நீங்கள் சில சிறு கைத்தொழில்களைக் கற்றுக்கொண்டு அதன்மூலமும் பொருள் சேர்க்கலாம். இன்னும் என்ன வேலைகள் செய்கிறீர்கள்?

இள: அப்பா! எங்கள் ஆசிரியர் எங்களில் சிலருக்கு முதல் உதவி அளிக்கப் பயிற்சி அளித்திருக்கிறார்.

அழ: முதல் உதவி என்றால் என்ன? தெரியுமா?

இள: சில சமயங்களில் சிலருக்குத் திடீரென்று விபத்துக்கள் நேரலாம்; இச்சமயங்களில் வைத்தியர் வரும் வரையில் அவர்களுக்குச் செய்ய வேண்டிய உதவிக்கு முதல் உதவி என்று பெயர். இதற்கு வேண்டிய பொருள்களை ஒரு பெட்டியில் சேகரித்துத் தயாராய் வைத்திருக்கிறோம்.

அழ: உங்கள் சங்கத்திற்கு இப்பெயர் ஏன் வந்ததென்று தெரியுமா?

முரு: எங்கள் சங்கத்தின் அடையாளம் ஒரு சிவந்த நிறமுடைய சிலுவை. ஆகையால் சிறுவர்

களாகிய நாங்கள் அங்கத்தினர்களாய் இருக்கும் சங்கத்திற்குச் சிறுவர் செஞ்சிலுவைச் சங்கம் என்று பெயர் வந்தது.

இள : அப்பா! செஞ்சிலுவைச் சங்கத்தை ஏற்படுத்தியவர் யார்? அஃது எப்போது எவ்வாறு ஏற்பட்டது?

அழ : **ஸ்விட்ஜர்லாந்து** நாட்டைச் சார்ந்த **ஹென்றி டூனன்ட்** என்பார் ஒரு சமயம் கால்நடையாக வட இத்தாலியில் போய்க்கொண்டிருந்தார். அப்போது ஓரிடத்தில் மக்கள் பலர் அலறி யழும் சத்தம் கேட்டது. அவர் ஓடோடிச் சென்று பார்த்தார். அங்கு ஆயிரக்கணக்கானவர் கைகால்கள் ஒடிந்தும், பலத்த காயப்பட்டும் கதறிக்கொண்டிருந்தார்கள். ஆஸ்திரியர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் நடந்த போரினல் அங்ஙனம் விளைந்தது என்று அவர் அறிந்தார். உடனே அவர் பலருடைய உதவி கொண்டு காயங்களைக் கட்டியும் உணவளித்தும் தண்ணீர் தந்தும், ஆறுதல் கூறியும் நூற்றுக்கணக்கான உயிர்களைக் காப்பாற்றினர். அனைவரும் அவரை வாயார வாழ்த்தினர்.

அன்று முதல் டூனன்ட் போரில் காயம்பட்டவர் பகைவராயினும் நண்பராயினும் அயலாராயினும் தேசம், நிறம், மதம், மொழி என்ற வேறுபாடின்றி உதவிபுரியும் இயக்கம் ஒன்றைத் தோற்றுவிக்க வேண்டும் என்பதைப் பற்றி ஆலோசித்தார். பல அறிஞர் அவர் கருத்தை ஆதரித்தனர். 1864-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 22-ஆம் தேதி பதினொரு நாடுகளின் பிரதிநிதிகள் ஜினிவாவில் கூடி '**செஞ்சிலுவை உடன்படிக்கை**' என்பதைச் செய்துகொண்டார்கள். இதுவே செஞ்சிலுவைச் சங்கம்

கள் உலகெங்கும் தோன்றுவதற்குக் காரண மாயிற்று.

இள : இச் சங்கத்திற்குச் செஞ்சிலுவை அடை யாளமாக அமைந்தது ஏன் ?

அழ : இச் சங்கத்தை நிறுவுவதில் ஸ்விட்ஜர் லாந்து நாட்டைச் சார்ந்தவர் பெருமுயற்சிகொண்டன ரல்லவா ? ஆகவே அந்நாட்டுக்குப் பெருமை யளிப் பதற்காகவே அந்நாட்டின் அடையாளமாகிய, வெண் ணிறத்தின் நடுவில் உள்ள செஞ்சிலுவையை இச் சங்கத்தின் அறிகுறியாக அமைத்துள்ளனர்.

முரு : போரில் உதவுவதுதான் இச் சங்கத்தின் நோக்கமா ?

அழ : அன்று. சமாதான காலத்திலும் இச் சங்கம் புரியும் தொண்டுகள் பலவாம். தொத்து நோய்களைத் தடுத்தல், வெள்ளம், தீக்கோள், பூகம்பம் பஞ்சம், முதலியன உலகில் எந்நாட்டில் நேர்ந்தாலும் உதவி புரிதல் முதலிய பல துறைகளில் இச்சங்கம் இன்றும் உழைத்து வருகிறது. செஞ்சிலுவைச் சங்கத்தின் நோக்கங்கள் இளமையில் உங்கள் மனத் தில் பதிவதற்காகவே நம் நாட்டில் 1925-ஆம் ஆண்டு முதல் சிறுவர் செஞ்சிலுவைச் சங்கத்தைப் பள்ளிக் கூடங்களில் ஏற்படுத்தியுள்ளார்கள். இதில் நீங்கள் சிறந்தவாறு பயிற்சி பெற்றால் ஒவ்வொருவரும் பயன் பெறுவதுடன் நாட்டிற்கும் பல நன்மைகள் உண் டாகும்.

முரு : அப்பா ! தாங்கள் கூறிய பல செய்தி களால் எங்கள் ஐயங்கள் பல அகன்றன. நாங்கள் எங்கள் சங்கத்தில் முழுமனதுடன் பயின்று உயர்ந்து விளங்கப் பாடுபடுவோம்.

## அருஞ்சொல் விளக்கம்

சங்கம் - கூட்டம்; ஆண்டுவிழா - ஓராண்டு முடிந்தவுடன் கொண்டாடும் திருவிழா; நிகழ்ச்சி நிரல் - நடைபெற வேண்டிய விஷயங்களின் வரிசை; அம்சம் - பகுதி; மாவட்டம் - ஜில்லா; வரவேற்புரை - தலைவரையும் கூட்டத்திற்கு வந்திருப்பவர்களையும் வருமாறு அழைத்துஉபசரிக்கும் சொற்பொழிவு; தீபந்தாங்கிய சீமாட்டி - பிளாரன்ஸ் நைட்டிங்கேல் அம்மையார்; குழு - கூட்டம்; அங்கத்தினர் - உறுப்பினர்; மருத்துவச்சாலை - வைத்திய சாலை; சவுக்காரம் - சோப்பு; நன்கொடை - நற்செயலுக்கு இலவசமாகக் கொடுக்கும் பொருள்; இயக்கம் - சங்கம்; உடன்படிக்கை - பலரும் சேர்ந்து செய்துகொள்ளும் ஒப்பந்தம்; அறிகுறி - அடையாளம்; தீக்கோள் - தீயினால் ஏற்படும் அழிவு; பூகம்பம் - பூமி நடுக்கம்.

## வினாக்கள்

1. முருகன் தம் சங்க ஆண்டுவிழா நிகழ்ச்சிகளாகக் கூறியன யாவை?

2. சிறுவர் செஞ்சிலுவைச் சங்கத்தின் நோக்கங்கள் எவை?

3. சுகாதாரத்தை வளர்ப்பதற்குச் சிறுவர் செஞ்சிலுவைச் சங்கத்தார் செய்யும் சேவைகளைக் குறிப்பிடுக.

4. முதல் உதவி என்றால் என்ன?

5. செஞ்சிலுவைச் சங்கம் யாரால் எப்போது எந்நோக்கத்துடன் ஏற்படுத்தப்பட்டது?

6. செஞ்சிலுவையை அடையாளமாக ஏற்படுத்தியதன் நோக்கம் யாது?

7. சமாதான காலங்களில் செஞ்சிலுவைச் சங்கம் புரியும் தொண்டுகள் யாவை?

8. சிறுவர் செஞ்சிலுவைச் சங்கம் எப்போது ஏன் ஏற்படுத்தப்பட்டது? அஃது எங்ஙனம் நடத்தப்பெறுகிறது?

## மொழிப் பயிற்சி

1. வாக்கியங்களிற் பயன்படுத்துக :—ஒழுங்காக, வரவேற்புரை, அங்கத்தினர்கள், நன்கொடை, ஓடோடி, நூற்றுக் கணக்கான, வாயார, உடன்படிக்கை, முழு மனதுடன்.

2. பிரித்து எழுதுக :—செஞ்சிலுவை, வரவேற்புரை, மருத்துவச்சாலை, மற்றொரு.

3. சேர்த்து எழுதுக :—ஓடி + ஓடி ; வெண்மை + நிறம் ; எள் + நெய் ; சுக + ஆதாரம்.

4. ஒரு சங்கத்தின் நடைமுறையைப் பற்றி இப்பாடத்தில் வந்துள்ள சொற்களில் நான்கைக் குறிப்பிடுக.

5. நீ கலந்து கொண்ட மாணவர் சங்க ஆண்டு விழாவின் நிகழ்ச்சிகளைப் பற்றி ஒரு சிறு குறிப்பு எழுதுக.

6. நீ அறிந்த சுகாதாரப் பழமொழிகளைக் கூறுக.

7. தீபந்தாங்கிய சீமாட்டியின் வரலாற்றைக் கேட்டறிக.

8. கீழே உள்ள சொற்களுக்கு எதிர்ப் பதங்கள் மாற்றித் தரப்பட்டுள்ளன. அவற்றை ஏற்றவாறு வரிசைப்படுத்தி எழுதுக :—

| பதம் | எதிர்ப்பதம் |
|---|---|
| இளமை | நண்பர் |
| பழமை | வெந்நீர் |
| சுத்தம் | முதுமை |
| உயர்வு | புதுமை |
| தண்ணீர் | அசுத்தம் |
| பகைவர் | தாழ்வு |



## இலக்கணப் பயிற்சி

நாற்காலி, பள்ளிக்கூடம், மாலை, கை, வெண்மை, தடுத்தல்.

இச் சொற்கள் யாவும் பெயர்களைக் குறிக்கின்றன. எனவே இவை பெயர்ச் சொற்களாம். ஒன்றன் பெயரைக் குறிக்கும் சொல் பெயர்ச் சொல் எனப்படும்.

நாற்காலி - இஃது ஒரு பொருளின் பெயராகும். இதுபோன்ற சொற்கள் பொருட் பெயர்கள் எனப்படும்.

பள்ளிக்கூடம் : இஃது ஓர் இடத்தின் பெயர். இதுபோன்றே இடத்தைக் குறிக்கும் சொற்கள் இடப் பெயர்களாம்.

மாலே : இது காலத்தைக் குறிக்கிறது. இதைப்போன்றே காலத்தைக் குறிக்கும் சொற்கள் **காலப் பெயர்களாம்.**

கை : இச் சொல் உடலின் ஓர் உறுப்பின் பெயராம். இது போன்ற உறுப்புக்களின் பெயர்கள் **சினைப்பெயர்களாம்.**

வெண்மை : இச் சொல் ஒரு பொருளின் குணத்தைத் (பண்பை) தெரிவிக்கிறது. இதைப் போன்ற சொற்கள் **பண்புப் பெயர்களாம்.**

தடுத்தல் : இஃது ஒரு செயலைக் (தொழிலை) குறிக்கிறது. இதைப்போல் செயலைக் குறிக்கும் சொற்கள் **தொழிற் பெயர்கள்** எனப்படும்.

கீழ்க்கண்ட பெயர்ச் சொற்கள் எவ்வகையைச் சார்ந்தன என்று குறிப்பிடுக :—

முருகன், ஆண்டு, மாவட்டம், பாடல், பற்கள், இளமை, உதவி, நகம், நாடு, பெருமை, பயிற்சி, நன்மை, பெட்டி, காய், மணி, நட்பு.

மரம், கல், மண்—இவை காரணம் கருதாமல் இடப்பட்ட பெயர்களாம். ஆதலால் இவை **இடுகுறிப் பெயர்கள்** எனப் படும்.

நாற்காலி, வளே, உடை—இவை ஒரு காரணம் பற்றி இடப் பட்ட பெயர்களாம். ஆதலால் இவை **காரணப் பெயர்கள்** எனப்படும்.

இரண்டு, மணங்கு, ஆழாக்கு, முழம்—இச் சொற்கள் அளவு களைக் குறிக்கின்றன. இவற்றிற்கு **அளவைப் பெயர்கள்** என்று பெயர். அளவைப் பெயர்கள் :

1. எண்ணல் அளவைப் பெயர் (உ - ம்) நூறு
2. எடுத்தல் அளவைப் பெயர் (உ - ம்) வீசை
3. முகத்தல் அளவைப் பெயர் (உ - ம்) படி
4. நீட்டல் அளவைப் பெயர் (உ - ம்) அடி

அவன், இவள், அது, அவை—இவை பொருள்களைச் சுட்டிக் காட்டுவதால் **சுட்டுப்பெயர்கள்** எனப்படும்.

எவன் ? யாவர் ? எது ? யாவை ?—இவை வினப் பொருள் களைக் குறிப்பதால் **வினப் பெயர்கள்** எனப்படும்.

# 4. நீலச் சிற்றுடை

பண்டைக் காலம் முதல் நம் நாட்டில் வள்ளல்கள் பலர் வாழ்ந்து வந்தனர். அவர்கள் வந்து கேட்பவருக்கு இல்லை என்று கூருது ஈயும் குணமுடையவராவர். அத்தகைய வள்ளல்களின் கொடைக் குணத்தாலேயே நம் தமிழ் மொழி அன்று முதல் இன்று வரை வளர்ந்து வந்துள்ளது. அங்ஙனம் தமிழ்ப் புலவர்களையும் பாணர் முதலிய கலைஞர்களையும் போற்றிக் காத்தவர்களில் பாரி முதலான கடையெழு வள்ளல்கள் மிகச் சிறந்தவர்களாவர். தமிழ் நாட்டில் ஈகைக்கு உதாரணமாகப் பாரியையே எடுத்துக்காட்டுவது வழக்கமாகும்.

சிறந்த வள்ளல்களே யன்றி அவர் வழி வந்தவரும் ஈகைக் குணம் உடையவராகவே இருந்தனர். தமிழ் நாட்டில் வள்ளல் தன்மை பரம்பரைக் குணமாகவே வளர்ந்து வந்தது என்று கூறலாம். 'நட்பும் தயையும் கொடையும் பிறவிக் குணம்' என்று ஔவையார் இதனை அழகாகக் கூறியுள்ளார். இதனை விளக்கக் கூடிய ஒரு நிகழ்ச்சி பழைய நூல்களில் காணப்படுகிறது. மிக்க சுவையான அவ்வரலாற்றைச் சுருக்கமாகக் கூறுவோம்.

'முல்லைக்குத் தேர் கொடுத்த நல்லோன்' என்று புகழ்பெற்ற பாரி வள்ளலின் புகழைக் கேட்டுச் சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தரும் பொருமை கொண்டனர். அதனுல் அவர்கள் பாரியைச் சூழ்ச்சியால் கொன்று பாரியின் பறம்பு மலையையும் அவன் நாட்டையும் கவர்ந்து கொண்டனர். பாரிக்கு அங்கவை, சங்கவை என்ற பெயருடைய மகளிர் இருவர் இருந்தனர். அவர்கள் தங்கள் தந்தையைப் போலவே

அருள் உள்ளம் வாய்ந்தவர்கள் ; அறிவும் அழகும் அமைந்தவர்கள். தந்தையை இழந்த அம்மகளிரைப் பாரியின் உயிர் நண்பராக விளங்கிய **கபிலர்** என்ற புலவர் அழைத்துக்கொண்டு சென்றார். அவர் களுக்குத் தக்க அரசிளங் குமரரைத் தேடி மணம் செய்து வைக்க வேண்டும் என்பது அவர் எண்ணம். அந்த எண்ணத்தோடு அவர் **விச்சிக்கோ, இருங் கோவேள்** என்ற அரசர்களிடம் சென்று, பாரியின் பெருமையை எடுத்துக் கூறினர் ; அறிவும் திருவும் அமைந்த அவ்வள்ளலின் மகளிரை மணந்துகொள்ளு மாறு வேண்டினர். ஆனால் அவ்வரசர்கள் பாரி மகளிரை மணப்பதனால் மூவேந்தர் பகை ஏற்படும் என்று கருதி அவர்களை மணக்க மறுத்துவிட்டனர்.

அரசிளங் குமரர் இருவரும் பாரி மகளிரை மணக்க மறுத்தமையால் கபிலர் மிகவும் வருந்தினர் ; செய்வதறியாது திகைத்தார். தம் ஆருயிர் நண்பனாக விளங்கிய பாரியைப் பிரிந்து வாழ்வதும் அவருக்குப் பெருந் துன்பத்தை அளித்தது. அதனால் கபிலர் பாரி மகளிரைக் கருணையும் உயர்ந்த ஒழுக்கமும் உடைய ஓர் அந்தணரிடம் ஒப்படைத்து அவர்களைக் காக்குமாறு செய்தார். பின்னர் அவர் உயிர் வாழ விரும்பாமல் தீயில் வீழ்ந்து உயிர் துறந்தார்.

அந்தணரிடம் ஒப்படைக்கப்பட்ட பாரி மகளிர் இருவரும் தம் அருமைத் தந்தையைப் பிரிந்த பெருந் துன்பத்தாலும், துன்பக் காலத்தில் தங்கட்குத் துணை யாய் அமைந்த புலவர் பெருமானை இழந்த வருத்தத் தாலும் பெரிதும் கவலை கொண்டு வாடினர். அடைக் கலமாக வந்தவரை ஆதரிக்கும் அருங்குணம் வாய்ந்த அவ்வந்தணர் அவர்கட்கு ஆறுதல் கூறி அவர்கள் துன்பத்தைத் தவிர்த்தார்; தாய் தந்தையற்ற அவர்

கள் தற்போது ஏழைகளாயினும் புலவர்க்கும் இரவலர்க்கும் கற்பக தருவாக விளங்கிய பாரி வள்ளலின் அருந்தவச் செல்வியர்களாதலின், அவர்கள் துன்பமில்லாது வாழ்வதற்கு வேண்டிய வசதிகள் யாவும் செய்து தந்தார். பாரிமகளிர் இருவரும் ஒரு சிறிய குடிசையில் எளிய நிலையில் வாழ்ந்து வந்தனர். 'குடை நிழலிருந்து குஞ்சரம் ஊர்ந்தோர், நடை மெலிந்து ஓரூர் நண்ணினும் நண்ணுவர்' என்ற செய்யுளின் கருத்து அவர்கள் வாழ்க்கையில் உண்மையாயிற்று.

அக்காலத்தில் புகழ் பெற்று விளங்கிய புலவர்களில் ஔவையார் சிறந்தவராவர். பெண்பாற் புலவராகிய அவரைப் பேரரசர்களும் சிற்றரசர்களும் பெரிதும் மதித்துப் போற்றினர். அவர் பாரி வள்ளலிடம் பெருமதிப்புக் கொண்டவர். ஒரு சமயம் அவர் பாரியின் உயர் குணங்களைப் பாராட்டிப் பாடினர். அது கேட்டு மனம் மகிழ்ந்த பாரி வள்ளல் சிறந்த பரிசில்கள் பல வழங்கிச் சிறப்பித்து அவரைத் தம்முடனேயே இருக்குமாறு வேண்டிக் கொண்டான். ஔவையார் **அதியமான்** என்ற வள்ளலைக் காண விரைந்து செல்ல விரும்பினர். எவ்வளவோ வேண்டியும் ஔவையார் இணங்காமையால் பாரி வருத்தத்துடன் விடை தந்து அனுப்பினன். ஔவையார் விரைந்து காட்டு வழியாகச் சென்று கொண்டிருந்தார். வழியில் சில கள்வர்கள் அவரைத் தடுத்து அவரிடமிருந்த விலையுயர்ந்த பொருள்களையெல்லாம் கவர்ந்து சென்றனர். அதனால் வருத்தமும் சினமும் கொண்ட அம் மூதாட்டியார் மீண்டும் பாரியின் அரண்மனை புகுந்து, "பாரி வள்ளலே! நீதிக்கும் நேர்மைக்கும் எடுத்துக் காட்டாக விளங்கும் உன் நாட்டில் கள்வர்கள் வாழ்

கின்றனரே ! நான் கைப்பொருளிழந்தேனே !'' என்று சினந்து கூறி முறையிட்டனர். அப்போது பாரி வள்ளல் அவரடியிணைகளில் வணங்கித் ''தாயே ! குற்றம் புரிந்தவன் நானே ; கள்வரல்லர். தங்களைப் பிரிந்திருக்க முடியாமல் மீண்டும் இங்கு வரவழைப் பதற்கே என் காவலரை அனுப்பி இவ்வாறு வழிப்பறி செய்யுமாறு கூறினேன். என்னை மன்னிக்க வேண்டும்,'' என்று கூறி உள்ளமுருக வேண்டினன். பாரி வள்ளலின் அளவற்ற அன்பைக்கண்டு ஔவை மூதாட்டியார் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். அவன் செய்த வழிப்பறியை வியந்து போற்றினர். அவன் மனம் மகிழப் பல நாட்கள் அவனுடன் தங்கிப் பின்னர் அதியமானை நாடிச் சென்றார்.

மற்றொரு சமயம் ஔவையார் காரி வள்ளலைக் காணச் சென்றார். அப்போது வள்ளல் தன் அரண்மனையில் இல்லாமல் வயலில் இருப்பதாக அறிந்து ஔவையார் அவரைக் காண வயலுக்குச் சென்றார். அப்போது அவர் கண்ட காட்சி அவரைத் திகைப் படையச் செய்தது. பெருஞ் செல்வரும் வள்ளலு மாகிய அவர் வயலில் உழவர்களுடன் தாமும் சேர்ந்து களை பறிப்பதைக் கண்டார். ஔவையாரைக் கண்ட காரி வள்ளல் மனம் மகிழ்ந்தார் ; உள்ளங்குளிர வரவேற்றார். அவர் ஔவையாரை அழைத்துத் '' தாங்களும் எங்களுடன் கலந்து வேலை செய்யுங்கள்,'' என்று கூறிக் களை பறிக்க உதவும் 'களைக்கொட்டு' என்ற கருவியை எடுத்து ஔவை யாரிடம் ஈந்தான். புலவராகிய தம்மை வயலில் பணி செய்யுமாறு வேண்டிய காரியின் வேண்டு கோளைக் கேட்ட ஔவையார் சினங்கொள்ள வில்லை. தம்மையும் அவர்களுள் ஒருவராகக் கருதி

அன்பு பாராட்டி உரிமையோடு அழைத்த அவனுடைய பேரன்பைப் பாராட்டினுர். அதனைத் தம் வாழ்வில் மறக்க முடியாத ஒரு நிகழ்ச்சியாகவே கொண்டார்.

சேரமான் அரண்மனையில் பெரிய விருந்து ஒன்று நடந்தது. பேரரசனுகிய சேரன் அளிக்கும் விருந்து என்றுல் சிற்றரசர்களும் பெருஞ் செல்வர்களும் புலவர்களும் கலந்து கொள்வார்களல்லவா ? விருந்து மண்டபம் நிறைய இடமில்லாதபடி பலரும் அமர்ந்திருந்தனர். அவர்களில் ஒருவராக ஔவையாரும் அமர்ந்திருந்தார். உணவு பரிமாறப்பட்டது. அனைவரும் உண்ணத் தொடங்கும் சமயத்தில் பெருஞ் செல்வர் ஒருவர் விருந்தில் கலந்துகொள்ள வந்தார். அவர் அமர்ந்துண்பதற்கு இடமில்லை. அதைக் கண்ட சேரமான் ஔவையாரை நோக்கி 'வாராய்!' என்று கூறி அழைத்தான். ஔவையார் எழுந்து வந்தார். அவர் அமர்ந்த இடத்தில் அச்செல்வரை அமர்த்தி விருந்துண்ணச் செய்தான் வேந்தன். இந் நிகழ்ச்சியை மற்றவராயிருந்தால் அவமானமாகக் கருதியிருப்பர். சேரமானின் பேரன்பை அறிந்தவரான ஔவையார் அங்கு வந்திருந்த மற்றவரையெல்லாம் அயலாராகக் கருதித் தம்மை மட்டும் தன் அன்புக்குரியவராகக் கருதியமையாலேயே சேரமான் மற்றவரை விட்டுத் தம்மை அழைத்தான் என்று எண்ணி உள்ளங் குளிர்ந்தார். சேரமானும் ஔவையாரை அன்புடன் அழைத்துச் சென்று தம் அருகில் அமரச் செய்து உணவுண்ணுமாறு உபசரித்தனன். அவனுடைய அளவற்ற பேரன்பை ஔவையார் பெரிதும் பாராட்டினுர்.

இங்ஙனம் எல்லோராலும் விரும்பிப் போற்றப்

பட்ட ஔவை மூதாட்டியார் பாரி மகளிர் வாழும் ஊருக்கு வர நேர்ந்தது. அவர் வந்த சமயம் மழைக் காலம். வானம் இருண்டு மழை பெய்தது. உடல் முழுதும் நனைந்துவிட்டது. குளிரால் உடல் நடுங்கியது. ஔவையார் மழைக்கு ஒதுங்குவதற்கும் இடம் இல்லாமல் பாரிமகளிர் வாழும் குடிசையை அடைந்தார். ஔவையாரைக் கண்ட பாரிமகளிர் மனம் மகிழ்ந்தனர். மழையால் நனைந்து குளிரால் நடுங்கும் அவர் நிலையைக் கண்டு உளம் பதைத்தனர்; உடனே அவருடைய ஈரத்தைத் துடைத்துத் தாங்கள் உடுத்தி கொள்வதற்காக வைத்திருந்த ஒரு நீலச் சிற்றுடையை அவருக்கு வழங்கி உடுத்திக் கொள்ளச் செய்தனர். தீ மூட்டி ஔவையாரைக் குளிர் காயச் செய்தனர். பின்னர், தங்கட்கு எனச் சமைத்த எளிய கீரையுணவினை அம்மையாருக்கு வழங்கி, ''எளிய நிலையில் வாழும் நாங்கள் அளிக்கும் இவ்வெளிய உணவினை உண்டு எங்களை வாழ்த்த வேண்டும்,'' என்று பணிவுடன் வேண்டிக் கொண்டனர்.

பாரி மகளிர் அன்புடன் அளித்த அவ்வுணவு அமுதமாக இருந்தது. உணவு கண்டு உள்ளங் குளிர்ந்த அம்மையார் அம்மகளிரின் முன்னைய நிலையையும், தற்போதுள்ள எளிய நிலையையும் எண்ணி வருந்தினார்; இத்தகைய ஏழ்மை நிலையிலும் அவர்களிடம் இருந்த கொடைக் குணத்தைக் கண்டு வியந்தார்; வள்ளல் பாரியின் மகளிரும் ஈகைக் குணத்துடன் விளங்குவதை எண்ணி மனம் பூரித்தார். உடனே அவருக்குப் பழைய நினைவுகள் எல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக நினைவுக்கு வந்தன. பாரி செய்த வழிப்பறியும், காரி கொடுத்த களைக்

கொட்டும், சேரமான் 'வாராய்' என்றழைத்ததும் ஆகிய நிகழ்ச்சிகள் அவர் மனத்தில் தோன்றின: அவை யெல்லாம் தம்மிடம் அவர்கள் கொண்டிருந்த பேரன்பை விளக்கும் செயல்களேயாயினும் மழையால் நனைந்து குளிரால் வருந்தி வந்த தமக்கு எளிய நிலையில் வாழும் பாரி மகளிர் அன்போடு வழங்கிய நீலச் சிற்ருடையை நோக்கும்போது அந்நிகழ்ச்சிகள் இவ்வளவு சிறந்தனவல்ல. ஏழ்மையிலும் தங்கட்கு என வைத்திருந்த ஒரு பொருளை ஈந்த இவர்கள் அன்பே சிறந்தது! கொடையே பெரியது! அம்மூன்றும் சேர்ந்தால் ஒரு சமயம் இந்த ஒரு கொடைக்கு ஈடாகலாம் என்று ஔவையார் எண்ணினர்; அளவற்ற உவகை கொண்டார். அவ்வுவகை பாட்டாக வெளிப்பட்டது.

"பாரி பறித்த பறியும் பழையனூர்க்
காரி கொடுத்த களக்கொட்டும்—சேரமான்
வாராய் எனவுரைத்த வாய்மொழியும் இம்மூன்றும்
நீலச்சிற் ருடைக்கு நேர்"

என்பது ஔவையார் பாடிய அழகான பாட்டு. இந்நிகழ்ச்சியிலிருந்து ஈகைக் குணம் பிறவியில் அமைவது; பரம்பரையாகத் தொடர்ந்து வருவது என்பது விளங்குகின்றதன்றோ?

பின்பு ஔவையார் தமக்குப் பேருதவி செய்த வள்ளல் பாரியின் அருமை மகளிரைத் தம் ஆற்றலால் திருக்கோவலூரை ஆண்ட தெய்வீகன் என்ற அரசனுக்கு மணம் செய்து வைத்தார். அவர்களும் இழந்த தம் செல்வாக்கைப் பெற்று மேலும் பலப்பல நற் செயல்கள் செய்து சிறப்பாக வாழ்ந்தனர் என்று கூறுவர்.

## அருஞ்சொல் விளக்கம்

வள்ளல் - அளவு கருதாமல் வரையாது வழங்குபவர் ; ஈயும் - கொடுக்கும் ; பாணர் - பண்டைக்காலத்தில் வாழ்ந்த ஓர் இனத்தார். அவர்கள் யாழ் வாசிப்பதில் வல்லவர்களாவர் ; கடை எழு வள்ளல்கள் - பாரி, காரி, ஓரி, ஆய், அதியமான், நள்ளி, பேகன் என்பவராவர் ; தயை - இரக்கம் ; முல்லை - முல்லைக் கொடி ; கவர்ந்துகொண்டனர் - கைப்பற்றிக்கொண்டனர் ; திரு - மேன்மை, அழகு ; அடைக்கலம் - துன்பக் காலத்தில் காப்பாற்றுமாறு ஒருவரை அடைவது ; தவிர்த்தார் - நீக்கினர் ; இரவலர் - யாசகர் ; கற்பகதரு - தேவலோகத்தில் உள்ள ஒரு மரம். அது வேண்டுவார் வேண்டும் பொருள்களையெல்லாம் தரத்தக்கது ; குஞ்சரம் - யானை ; நண்ணுவர் - அடைவர் ; அருந்தவம் - சிறந்த தவம்; மூதாட்டி - முதுமை + ஆட்டி = முதுமையை ஆள்பவள், கிழவி ; முறையிட்டனர் - வேண்டினர் ; அடியிணை - இரண்டு பாதங்கள் ; வழிப்பறி - கொள்ளை ; சிற்றுடை - சிறுமை + ஆடை ; உள்ளம் பூரித்தார் - மனமகிழ்ந்தார் ;உவகை - மகிழ்ச்சி ; நேர் - சமம்.

## வினாக்கள்

1. வள்ளல் என்பார் யாவர் ?
2. கடையெழு வள்ளல்களின் பெயர்களைக் கூறுக.
3. பாரி மகளிர்க்குக் கபிலர் செய்த உதவி யாது ?
4. பாரிமகளிர் எங்ஙனம் வாழ்ந்தவர்கள் ? பின்பு எந்நிலையை அடைந்தனர் ? அதனால் அறியும் படிப்பினையை எழுதுக.
5. ‘ குற்றம் புரிந்தவன் நானே ’—சந்தர்ப்பம் கூறுக.
6. ஒளவையார் தம் வாழ்வில் மறக்க முடியாத நிகழ்ச்சியாகக் கொண்டது எது ?
7. சேரமான் ஒளவையாரிடம் கொண்டிருந்த அன்பை விளக்குக.
8. பாரிமகளிர் ஒளவையாருக்குச் செய்த உதவி யாது ?
9. ஒளவையார் பாரிமகளிரின் கொடையின் சிறப்பை எங்ஙனம் பாராட்டினர் ?

## மொழிப் பயிற்சி

1. வாக்கியங்களில் பயன்படுத்தி எழுதுக :—பரம்பரை, நிகழ்ச்சி, அடைக்கலம், கற்பகதரு, பரிசில், எடுத்துக்காட்டு, வழிப்பறி, உள்ளம்குளிர, வேண்டுகோள்.

2. பிரித்து எழுதுக :—ஆருயிர் ; சிற்றரசர் ; கண்ணீர் ; இந்நிகழ்ச்சி; நற்செயல்.

3. சேர்த்து எழுதுக :—பண்டு + காலம் ; இ + உண்மை ; மூன்று + வேந்தர் ; இளமை + குமரர் ; பெருமை + அரசர்.

4. அடைப்புக் குறிகளில் தரப்பட்டுள்ளவைகளில் சரியான சொல்லைத் தெரிந்து சேர்த்து எழுதுக :—

1. முல்லைக்குத் தேர் கொடுத்த நல்லோன் ——— (காரி, ஓரி, பாரி)
2. பாரிமகளிரை மணந்து கொண்டவன் ——— (விச்சிக்கோ, தெய்வீகன், இருங்கோவேள்)
3. கடையெழு வள்ளல்களில் ஒருவன் ——— (அரிச்சந்திரன், சேரமான், பேகன்)

5. ஔவையார் பாரி மகளிரின் ஈகைக் குணத்தினைப் பாராட்டித் தாமே கூறுவது போலப் பத்து வரிகளில் எழுதுக.

## இலக்கணப் பயிற்சி

1. கபிலர் பாரிமகளிரை அழைத்துக்கொண்டு சென்ருர்.
2. வாழைமரம் ஒரு குலையே தரும்.

இவைகளில் கபிலர் என்ற சொல்லையும் வாழை மரம் என்ற சொல்லையும் கவனியுங்கள். கபிலர் என்பது ஆறறிவுடைய மக்களில் ஒருவரைக் குறிக்கிறது. ஆரும் அறிவாகிய பகுத்தறிவை உடைய மக்களைக் குறிக்கும் சொல் உயர்திணைச் சொல் எனப்படும்.

வாழை மரத்திற்குப் பகுத்தறிவுண்டா ? இல்லையன்ருே? ஆதலால் அதனைக் குறிக்கும் சொல் அஃறிணைச் சொல் எனப்படும்.

மக்களையும், தேவரையும் நரகரையும் குறிக்கும் சொல் உயர் திணை. ஏனைய உயிருள்ள பொருள்களையும், உயிரில்லாத பொருள்களையும் குறிக்கும் சொல் அஃறிணை. (அல் + திணை = அஃறிணை)

1. சேரமான் ஔவையாரோடு அமர்ந்து உண்டான்.
2. அங்கவை பாரியின் மகளாவாள்.
3. மூவேந்தர் பாரியிடம் பகைமை கொண்டனர்.
4. களைக்கொட்டு களை பறிக்க உதவுகிறது.
5. வாழை மரங்கள் கனியுதவிய பின் வெட்டப்படுகின்றன.

| | |
|---|---|
| 1. ஓர் ஆணைக் குறித்து வழங்கும் சொல்—ஆண்பால். (உ - ம்) சேரமான்.<br>2. ஒரு பெண்ணைக் குறித்து வழங்கும் சொல்—பெண்பால். (உ - ம்) அங்கவை.<br>3. ஆண்களில் பலரையோ, பெண்களில் பலரையோ, ஆண் பெண் பலரையோ குறித்து வழங்கும் சொல்—பலர்பால். (உ - ம்) மூவேந்தர். | உயர்திணை |
| 4. அஃறிணையில் ஒரு பொருளைக் குறித்து வழங்கும் சொல்—ஒன்றன் பால். (உ - ம்) களைக்கொட்டு.<br>5. பலபொருள்களைக் குறித்து வழங்கும் சொல்—பலவின்பால். (உ - ம்) வாழை மரங்கள். | அஃறிணை |

மேற் கூறியவற்றில் சேரமான், அங்கவை, களைக்கொட்டு என்பன ஒவ்வொரு பொருளையே குறிப்பனவாதலின் ஒருமை எனப்படும்.

மூவேந்தர், வாழை மரங்கள் என்பன பலபொருள்களைக் குறிப்பனவாதலின் பன்மை எனப்படும்.

உயர்திணை அஃறிணைப் பொருள்களில் ஒன்றைக் குறிப்பது ஒருமை எண்; பலவற்றைக் குறிப்பது பன்மை எண்.

இப்பாடத்திலிருந்து இருதிணை, ஐம்பால்களுக்கும், ஒருமை பன்மை எண்களுக்கும் ஐந்தைந்து உதாரணம் எழுதுக.

# 5. இளங்கோ எழுதிய கடிதம்

கடிதம் எழுதுதல் ஒரு கலையாகும். இப்பழக்கம் மிகப் பழங்காலம் முதல் நம் நாட்டில் போற்றி வளர்க்கப் பட்டுள்ளது. பண்டைக் காலத்தில் உரைநடை எழுதும் வழக்கம் அதிகமாக இல்லாமையால் கடிதங்களும் பாடல்களிலேயே எழுதப்பட்டன. அத்தகைய கடிதங்கள் 'சீட்டுக் கவி' என்று வழங்கப்பட்டன. இக் கடிதங்களிலிருந்து நாம் பல அரிய செய்திகளை அறிந்து கொள்ளலாம். தற்காலத்திலும் சிறந்த பெரியோர்கள் எழுதிய கடிதங்கள் கடிதங்களாக மட்டும் மதிக்கப்படாமல் சிறந்த நூல்களாகப் போற்றப்பட்டு வருகின்றன.

கடிதம் எழுதுவோர் கீழே தரப்பட்டுள்ளவைகளை நன்கு அறிந்திருத்தல் வேண்டும். 1. எழுதுவோர் முகவரி, 2. யாருக்குக் கடிதம் எழுதுகின்றோமோ அவர்களைத் தக்க முறையில் முன்னிலைப்படுத்தி எழுதுதல், 3. எழுதப்படும் பொருளைப் படிப்பவர்க்கு நேர் நின்று கூறக் கேட்பது போன்ற உணர்ச்சி உண்டாகுமாறு தெளிவாகவும் சுருக்கமாகவும் எழுதுதல், 4. கையெழுத்திடும் முறை, 5. யாருக்கு எழுதுகின்றோமோ அவர்களுடைய முகவரியைத் தெளிவாக எழுதுதல் ஆகிய இவ்வைந்து பாகங்களும் கடிதத்தின் முக்கியமான பகுதிகளாம். இவை யாவும் ஒழுங்கான முறையில் அமைந்த கடிதங்களே சிறந்தனவாம்.

அம்முறையில் அமைந்த ஒரு கடிதம் மாதிரிக்காகத் தரப்பட்டுள்ளது. அதனைப் படித்துக் கடிதத்தின் ஐந்து பாகங்களும் எவ்வாறு அமைந்துள்ளன என்று கவனியுங்கள். அக்கடிதம் சென்னையில் ஒரு பள்ளியில் பயிலும் மாணவன் தன் நண்பர்களுடன்

செஞ்சிக் கோட்டையைக் கண்டு களித்த செய்தியைப் பற்றியதாகும். அதில் கூறப்பட்ட செய்திகளை ஊன்றிப் படித்தால் செஞ்சிக் கோட்டையைப் பற்றிய விவரங்களையும் நீங்கள் அறிந்து கொள்ளலாம்.

4. ஆயலூர் முத்தையா முதலி தெரு,
சென்னை–1.
19–10–53.

அன்பு மிக்க நண்ப,

வணக்கம்; நலம். நலமறிய விரும்புகின்றேன். உன் பெற்றோர்க்கு என் வணக்கத்தைத் தெரிவிக்கவும்.

நான் இந்த நவராத்திரி விடுமுறையில் என் நண்பர்களுடன் தென்னூர்க்காடு மாவட்டத்தில் உள்ள செஞ்சிக் கோட்டையைக் கண்டு களித்தேன். அப்போது நீயும் என்னுடன் இருந்திருந்தால் மிக்க மகிழ்ச்சியடைந்திருப்பேன். நான் கண்ட காட்சிகளால் மிக்க உவகையும், உற்சாகமும் அடைந்தேன். அவற்றை உனக்கு அறிவிக்கும் ஆவலாலேயே இக் கடிதம் எழுதலானேன்.

இவ்விடு முறையில் நானும் என் வகுப்பு மாணவர்கள் இருபது பேருமாக எங்கள் ஆசிரியருடன் சென்று தேசிங்கு மன்னன் சிறப்புடன் ஆண்ட செஞ்சிக் கோட்டையைக் காணத் திட்டமிட்டோம். பிரயாணத்திற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்து கொண்டு நாங்கள் 10–10–53 அன்று காலை புறப்பட்டோம். நாங்கள் நேராகப் புகை வண்டியில் திண்டிவனம் சென்று அங்கிருந்து பஸ் மூலமாக அன்று பிற்பகல் செஞ்சியை அடைந்தோம். திண்டிவனத்திற்கும் செஞ்சிக்கும் ஏறக்குறையப் பதினைந்து கல் தொலைவுள்ளது. நாங்கள் பகலில் பிரயாணம் செய்தமையால் வழியில் பற்பல இயற்கைக் காட்சி

களைக் கண்டு மகிழ்ந்தவாறே குதூகலத்துடன் சென்று செஞ்சியை அடைந்தோம்.

செஞ்சி என்பது ஒரு சிற்றூராகும். அங்கு நாங்கள் வசதியான ஒரு சத்திரத்தில் தங்கினோம். அன்று பிற்பகல் முழுதும் நாங்கள் அவ்வூரைச் சுற்றிப் பார்த்தோம். அவ்வூரைச் சுற்றிலும் வயல்களும், பெரிய தோப்புக்களும், தோட்டம் துரவுகளும் பச்சைப் பசேலென விளங்குகின்றன. ஊருக்குக் கிழக்கே இரண்டு மைல் தூரத்தில் செஞ்சியாறு பாய்கிறது. அதற்கு வராக நதி என்னும் பெயர் வழங்குகிறது. இவற்றையெல்லாம் கண்டு நாங்கள் மிகவும் உற்சாக மடைந்தோம். சென்னையில் பெரிய வீடுகளில், சிறிய அறைகளில், பல குடும்பங்களுக் கிடையில் கூட்டில் அடைபட்ட குருவிகளைப் போல வாழ்ந்த நாங்கள் சுதந்திரமாகப் பறந்து திரியும் சிட்டுக்களைப் போல ஆடினோம்; பாடினோம். அன்று இரவு நாங்கள் நல்லுணவுண்டு கவலையற்று உறங்கினோம்.

மறு நாள் காலை எழுந்தவுடன் கண்ணுக் கெதிரே கம்பீரமாக விளங்கும் மலையின்மீது ஏறிப் பார்க்க வேண்டும் என்று எங்கள் உள்ளம் துடித்தது. நாங்கள் காலை உணவுண்டு பிற்பகலுக்கு வேண்டிய உணவையும் எடுத்துக் கொண்டு கோட்டையைக் காணப் புறப்பட்டோம். ஊரிலிருந்து அரை மைல் தூரத்தில் செஞ்சிக் கோட்டை உள்ளது. இராசகிரி, கிருஷ்ணகிரி, சந்திரகிரி என்ற மூன்று மலைகள் முக்கோண வடிவமாக அமைந்துள்ள இயற்கை அழகு வாய்ந்த இடத்திலே இக்கோட்டை அமைந்திருக்கிறது. கிருஷ்ணகிரி வடக்கிலும் அதற்கு நேர் எதிரே கால் மைல் தொலைவில் சந்திரகிரி தெற்கிலும் உள்ளன.

சந்திரகிரிக்குத் தென்மேற்கே இராசகிரி அமைந்துள்ளது. இவைகளில் இராஜகிரியே மிக்க உயரமானதாகும். அதன் உயரம் சுமார் 800 அடி என்று கூறுகின்றனர். இம் மூன்று குன்றுகளேயும் இணைத்துக்




கருங்கற் சுவர் கட்டப்பட்டுள்ளது. அது 60 அடி அகலமும் 30 அடி உயரமும் இருக்கும் என்ருல் அதன் வலிமையை என்னென்று கூறுவது! மதிலுக்கு வெளியே ஆழமான அகழி உள்ளது. அவ்வகழியின் அகலமும் 80 அடி இருக்கும். இவற்றைக் கண்ட நாங்கள் மிகவும் வியப்படைந்தோம்.

செஞ்சிக் கோட்டைக்கு இரண்டு வழிகள் உள்ளன. கிழக்கில் உள்ள வாயிலுக்குப் **புதுச்சேரி வாயில்** என்று பெயர். வடக்கில் உள்ள வாயிலுக்கு **ஆர்க்காட்டு வாயில்** என்று பெயர். புதுச்சேரி வாயில் வழியாகச் சென்ருல் இராஜகிரியின் அடிவாரத்தை அடையலாம். அடிவாரத்தில் பல கட்டடங்கள் உள்ளன; மறைவான பல இடங்களும் உள்ளன. அவ்விடங்கள் சண்டை ஏற்பட்டால் மறைந்திருந்து பகைவர்களேச் சுடுவதற்கு உபயோகப்பட்டனவாம்.

அங்குப் பாழடைந்த கோயிலொன்றும், மசூதி ஒன்றும் உள்ளன. அக்கோயிலே வேங்கடராமசுவாமி கோயில் என்று கூறுகின்றனர். ஆனல் அக்கோயிலில் எத்தகைய கடவுள் உருவமும் இல்லே.

அவ்விடத்தைக் கடந்து நாங்கள் உள்ளே சென்றோம். அங்கு ஒரு பெரிய வெளி யுள்ளது. அதன் சுற்றளவு சுமார் மூன்று மைல் இருக்கும். இப் பகுதியில் அமைந்துள்ள கோட்டை கீழ்க்கோட்டை என்று வழங்கப்படுகிறது. கீழ்க் கோட்டையிலிருந்து கிருஷ்ணகிரிமீது ஏறுவதற்குப் படிகள் அமைந் துள்ளன. இக்கீழ்க் கோட்டைக்குள்ளேயே இராச கிரியின் அடிவாரத்தில் அரை வட்ட வடிவமாக மற்றொரு கோட்டையும் உள்ளது. அஃது **உட் கோட்டை** என்று வழங்கப்படுகிறது. உட் கோட்டையிலிருந்து இராசகிரிமீது ஏறுவதற்குப் படி கள் அமைக்கப்பட்டுள்ளன. அவ்வுட் கோட்டையைச் சுற்றிலும் பலமான மதில்களும் அகழிகளும் அமைக் கப்பட்டுள்ளன. இவ்வுட் கோட்டையில் நாற்கோண வடிவமான ஓர் அழகிய கட்டடம் உள்ளது. அஃது ஏழடுக்கு மாளிகையாம். செஞ்சிக் கோட்டையிலே மிக அழகான கட்டடம் அது தான். அதன் பெயர் **கலியாணமகால்** என்பதாம். இவ்வளவு உயரமான கட்டடத்தை நாங்கள் இதற்கு முன்பு பார்த்ததில்லே. அதைச் சுற்றிப் பல கட்டடங்கள் உள்ளன. அவை களில் முன்பு அரசகுலப் பெண்கள் வசித்தனராம். மேலும் அங்குப் பெரிய தானியக் களஞ்சியம், எண் ணெய்க் கிணறு, வெடி மருந்துக் கிணறு, சிலம்ப மண்டபம், போர் வீரர் வாழ்ந்த இடங்கள், சக்கரக் குளம், செட்டி குளம் என்ற இரண்டு குளங்கள் ஆகியன காண வேண்டிய காட்சிகளாம். செட்டி

குளத்திற்குப் பக்கத்தில் ஒரு மேடையை நாங்கள் கண்டோம். அங்குத்தான் தேசிங்கு மன்னனின் உடல் கொளுத்தப்பட்டது என்று கூறுகின்றனர்கள்.

இக் காட்சிகளை யெல்லாம் கண்டு களித்த பிறகு நாங்கள் இராசகிரியின்மீது ஏறத் தொடங்கினோம். இராசகிரியில் நானூறு அடி உயரம் சென்றால் ஒரு சம நிலம் காணப்படுகிறது. அங்கே புளிய மரங்கள் நிறைந்துள்ளன; பாழடைந்த இரண்டு கோயில் களும் உள்ளன. ஒன்று அரங்கநாதர் கோயில். மற்றொன்று தேசிங்கின் குல தெய்வமாகிய கமலக் கண்ணி கோயில். இங்கும் அரங்கநாதர் கோயிலில் விக்கிரகம் இல்லை. கமலக்கண்ணி கோயிலுக்கு அருகில் இரண்டு பாறைகளுக்கு நடுவில் ஆழமான சுனை ஒன்று இருக்கிறது. அது பார்ப்பதற்கு அச்சத் தைத் தருகிறது. 200 சதுர அடி பரப்புடைய அந் நீர்ச் சுனையில் உள்ள நீர் மிகவும் தெளிவாகவும் குளிர்ச்சியாகவும் உள்ளது. இவற்றை யெல்லாம் கண்டு ஆனந்தங் கொண்ட நாங்கள் அங்கேயே எங்கள் பகலுணவை உண்டு சிறிது இளைப்பாறி னோம்.

அங்கிருந்து இராசகிரி செங்குத்தாக அமைந் திருக்கிறது. அதன்மீது ஏறுவது சிறிது கடினம். மலையின் தென் மேற்குப் பக்கமாகச் சரிவாக ஒரு வழி அமைந்துள்ளது. அவ் வழியே ஏறிச் சிறிது தூரம் சென்றோம். அங்கு நாங்கள் ஒரு வியப்பான காட்சியைக் கண்டோம். நாங்கள் ஏறிச் சென்ற பாறையை அடுத்து 30 அடி இடைவெளியுள்ள ஒரு பெரிய பள்ளம் காணப்பட்டது. அதன் ஆழம் 60 அடி இருக்கும். அதனைக் காணும்போதே பேரச்சம் உண்டாகின்றது. அப்பள்ளத்தைக் கடந்து எதிர்ப்

புறம் உள்ள பாறையை அடைவதற்கு மரத்தால் பாலம் அமைத்துள்ளனர். பழைய காலத்தில் சண்டை ஏற்பட்டால் அப்பாலத்தை எடுத்து விடுவார்கள் என்றும், அதனுல் பகைவர்கள் அதனைக்கடந்து செல்ல முடியாது என்றும், இஃது உச்சிக் கோட்டைக்கு அமைந்த ஒரு பாதுகாவல் என்றும் எங்கள் ஆசிரியர் அதைப் பற்றி விளக்கிக் கூறினுர். பண்டை அரசர்களின் அறிவுத் திறமையை வியந்தவாறே மரப் பாலத்தைத் கடந்து இராசகிரியின் உச்சியை அடைந்தோம்.

இராசகிரியின் உச்சியில் இரண்டு பெரிய மண்டபங்களை நாங்கள் கண்டோம். அவை மிக்க அழகானவை. அவை எண் கோண வடிவமாக அமைந்துள்ளன. அம் மண்டபங்களில் உள்ள அறைகளில் காற்று குளுகுளு என்று வீசுகிறது. அவ்வறையை விட்டு வர எங்கட்கு மனமே வரவில்லை. அம் மண்டபங்களுக்குப் பக்கத்தில் பெண்கள் வசிப்பதற்கு ஏற்ற அந்தப்புரம் ஒன்றும் இருக்கிறது. இங்குத் தான் தேசிங்குராஜன் தன் மனைவியுடன் வாழ்ந்து வந்தான் என்று கூறுகின்றனர். மற்றும் இராசகிரியில் பார்க்கத் தக்க காட்சிகள் பல உள்ளன. அவற்றில் கொடி மேடையும் மணிக் கூண்டும் முக்கியமானவையாம். முன்பு கொடி மேடையில் அமைந்த கொடிக் கம்பத்தில் செஞ்சியரசர் கொடி பறக்கவிடப் படுமாம். அஃது எங்கும் தெரியுமாம். மணிக் கூண்டில் பெரிய மணி கட்டப்பட்டிருந்ததாகவும் ஒவ்வொரு மணிக்கும் அதனை அடிப்பார்கள் என்றும், அவ்வோசை செஞ்சி நகரம் முழுவதும் கேட்கும் என்றும் கூறுகின்றனர். மேலும் இராசகிரியின் உச்சியில் அழகிய வேலைப்பாடமைந்த அரங்கநாதர் ஆலயம், பூமிக்கடியில்

அமைந்த நிதிச் சாலை, நெற் களஞ்சியம் ஆகியவை உள்ளன; பெரிய பீரங்கி ஒன்றும் வைக்கப்பட்டுள்ளது. இவற்றை யெல்லாம் கண்டு நாங்கள் கிருஷ்ணகிரியைக் காணப் புறப்பட்டோம்.

கிருஷ்ணகிரி தேசிங்கு ராஜன் இருந்து அரசாண்ட இடம் என்று சொல்கின்றனர். கிருஷ்ணகிரி இராஜகிரியை விடச் சிறியது. இம் மலையிலும் பழங்காலச் சின்னங்கள் பலவுள்ளன. அவையெல்லாம் பாழ்பட்டுக் கிடக்கின்றன. இங்குக் கருங் கற்களால் கட்டப்பட்ட தானியக் களஞ்சியமும், எண்ணெய்க் கிணறும் உள்ளன. அக் கிணறு இரண்டு பகுதியாக அமைந்திருக்கிறது. அதில் ஒரு பகுதியில் எண்ணெயும் மற்றொரு பகுதியில் நெய்யும் நிரப்பி வைப்பார்களாம். இம் மலையிலும் விக்கிரகம் இல்லாத அரங்கநாதர் கோயில் ஒன்று உள்ளது. இங்குள்ள செங்கல்லால் கட்டப்பட்ட கொலு மண்டபம் மிக அழகானது. அம் மண்டபத்தில் கருங் கல்லாலேயே செய்யப்பட்ட ஊஞ்சல் ஒன்று காணப்படுகிறது. அதைப் பார்த்து நாங்கள் ஆச்சரியப்பட்டு நின்றோம். ஊஞ்சலின் வளையங்களும் சங்கிலிகளும் கல்லாலேயே செய்யப்பட்டுள்ளன.

சந்திரகிரியில் குறிப்பிடத்தக்கன ஒன்றுமில்லை. பாழடைந்த மண்டபம் ஒன்றே அங்குள்ளது. அம் மலை தற்போது சங்கிலி மலை என்று வழங்கப்பட்டு வருகிறது. கிருஷ்ணகிரிக்கும் இராசகிரிக்கும் இடையில் 100 அடி உயரமும் 20 அடி அகலமும் கொண்ட ஒரு சுவர் உள்ளது. அதன்மீது தேசிங்கு ராஜன் குதிரைச் சவாரி செய்வது வழக்கமாம்.

கிருஷ்ணகிரிக்கு வடக்கில் அரங்கநாதகிரி என்று மற்றொரு மலையுள்ளது. அம்மலையில் அரங்கநாதர்

கோயில் உள்ளது. அக்கோயிலில் உள்ள அரங்க நாதர் உருவம் சுவர்ப் புறமாகத் திரும்பியுள்ளது. தேசிங்கு ராஜன் நவாபுடன் சண்டைக்குச் செல்லும் போது தன் குல தெய்வமாகிய அரங்கநாதரை வணங்கி விடை கேட்டான் என்றும், அரங்கநாதர், "இன்று நின்று நாளை சென்றால் வெற்றி பெறலாம்," என்று கூறியதாகவும், தேசிங்கு அதனை ஏற்றுக் கொள்ளாமல் போருக்குச் சென்றதால் அரங்கநாதர் தம் முகத்தைச் சுவர்ப்புறமாகத் திருப்பிக் கொண் டனர் என்றும் கூறுகின்றனர். அக்கோயிலுக்கு அருகில் ஒரு வற்றாத சுனை உள்ளது; அந்நீர் கடவுட் பூசைக்குப் பயன்படுகிறது. நந்தியாவட்டச் செடி யொன்றும் எலுமிச்சஞ் செடி யொன்றும் உள்ளன.

இவ்வாறு செஞ்சிக் கோட்டையின் பல பகுதி களையும் நாங்கள் கண்டு களிப்பதற்குள் பொழுது சாய்ந்தது. நாங்கள் புகழ் பெற்ற அக் கோட்டையை விட்டுப் பிரிய முடியாமல் திரும்பி எங்கள் இருப்பிடம் அடைந்தோம். இரவு முழுதும் அக் கோட்டையை ஆண்ட தேசிங்கு மன்னனின் வீரம், ஆற்றல் ஆகிய வற்றைப் பற்றியே பேசிப் பேசி இன்புற்றோம். மறு நாள் காலை நாங்கள் புறப்பட்டு நலமாகச் சென்னை வந்து சேர்ந்தோம். செஞ்சிக் கோட்டை நம் நாட்டு நாகரிகத்தை விளக்கும் உயர்ந்த சின்னமாகும். இத் தகைய கோட்டையை ஒவ்வொருவரும் சென்று பார்த்து மகிழ வேண்டும். சமயம் வாய்த்தால் நீயும் சென்று பார்த்து மகிழத் தவறாதே.

இங்ஙனம்

உன் அன்புள்ள,

வி. இளங்கோ.

முகவரி :—

திரு. வேங்கடேசன்,
9, பெரிய தெரு,
திருவத்திபுரம்,
வட ஆர்க்காடு ஜில்லா.

### அருஞ்சொல் விளக்கம்

முகவரி - விலாசம் ; மாவட்டம் - ஜில்லா; ஆவல் - விருப்பம் ; திட்டம் - வரையறை ; குதூகலம் - மகிழ்ச்சி ; துரவு - கிணறு ; குன்று - சிறுமலை ; களஞ்சியம் - தானியங்களைச் சேமித்து வைக்கும் இடம் ; சிலம்பமண்டபம் - வீரர்கள் மற்போர், வாட்போர் முதலியன பயிலும் இடம் ; சுனை - மலையில் உள்ள நீர் நிலை ; எண்கோணம் - எட்டு மூலைகள் ; நிதிச்சாலை - பொக்கிஷம்; சின்னம் - அடையாளம்.

### வினாக்கள்

1. கடிதங்களின் முக்கிய பாகங்கள் எவை ?
2. செஞ்சிக் கோட்டை எங்குள்ளது ? அதற்குச் செல்லும் வழி யாது ?
3. செஞ்சிக் கோட்டை எவ்வாறு அமைக்கப்பட்டுள்ளது ?
4. கீழ்க் கோட்டையில் காணத் தகுந்த காட்சிகள் எவை ?
5. உட் கோட்டையின் அமைப்பினை விவரிக்க.
6. இராஜகிரியில் காணப்படும் பழங்காலச் சின்னங்கள் எவை ?
7. இராஜகிரியில் உள்ள சுனை, மரப்பாலம் இவற்றைப் பற்றிக் குறிப்பு எழுதுக.
8. கிருஷ்ணகிரியில் காணப்படும் காட்சிகள் யாவை ?
9. அரங்கநாதகிரியில் அரங்கநாதர் உருவம் எவ்வாறு உள்ளது ? அதற்குக் காரணம் யாது ?

## மொழிப் பயிற்சி

1. மாவட்டம், குதூகலம், பச்சைப் பசேலென, ஏற்பாடு, சம நிலம், பழங்காலச் சின்னம், களஞ்சியம், கொலு மண்டபம், வேலைப்பாடு, நாகரிகம்—இவற்றை உம் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

2. பிற்பகல், நல்லுணவு, உட்கோட்டை, பேரச்சம், மரப் பாலம், பழங்காலம், கருங்கல்—இவற்றைப் பிரித்துக் காட்டுக.

3. மூன்று + கோணம் - முக்கோணம் ; நான்கு + கோணம்- நாற்கோணம் ; எட்டு + கோணம் - எண்கோணம்.

ஒன்று + பொருள் ; இரண்டு + குளம் ; ஐந்து + பால் ; ஆறு + வகை ; ஏழு + உலகம்—இவற்றைச் சேர்த்து எழுதுக.

4. உங்கள் பள்ளியில் நடை பெற்ற ஒரு விளையாட்டுப் போட்டியைப் பற்றிக் கடிதத்தின் ஐந்து பாகங்களும் அமைய நண்பனுக்கு ஒரு கடிதம் எழுதுக.

5. அறிந்து கொள்க :—

(1) ஜவஹர்லால் நேரு தம் மகளுக்கு எழுதிய கடிதங்கள், விவேகானந்தர் எழுதிய கடிதங்கள், இராமலிங்க சுவாமிகள் எழுதிய கடிதங்கள் ஆகியவைகள் நூல்களாக அச்சிடப் பட்டுப் பலராலும் போற்றிப் படிக்கப்படுகின்றன.

(2) வழக்கிலுள்ள சில சொற்களுக்கு ஏற்ற தமிழ்ச் சொற்கள் இங்குத் தரப்பட்டுள்ளன. அவற்றை அறிந்து பயன்படுத்துக.

விலாசம் - முகவரி ; தபால் ஆபீஸ் - அஞ்சல் நிலையம் ; கார்டு - அஞ்சல் அட்டை ; கவர் - அஞ்சல் உறை ; ஸ்டாம்பு - அஞ்சல் தலை ; புக் போஸ்டு - புத்தக அஞ்சல் ; ரிஜிஸ்டர் - பதிவுக் கடிதம்.

## இலக்கணப் பயிற்சி

1. **நான்** செஞ்சிக் கோட்டையைக் கண்டு களித்தேன்.

2. **நீயும்** சென்று பார்க்கத் தவறாதே.

3. **தேசிங்கு ராஜன்** செஞ்சிக் கோட்டையில் வாழ்ந்து வந்தான்.

இவ் வாக்கியங்களில் நான் என்பது பேசுபவனையும், நீ என்பது முன்னின்று கேட்பவனையும் தேசிங்கு ராஜன் என்பது அயலான் ஒருவனையும் குறிக்கின்றன.

பேசுபவனைக் குறிக்கும் சொல் தன்மை இடம். முன் நின்று கேட்பவனைக் குறிக்கும் சொல் முன்னிலை இடம். பேசுபவன், கேட்பவன் அல்லாத அயலானைக் குறிக்கும் சொல் படர்க்கை இடம்.

யான், நான்—தன்மை ஒருமைப் பெயர்கள்.

யாம், நாம், நாங்கள்—தன்மைப் பன்மைப் பெயர்கள்.

நீ—முன்னிலை ஒருமைப் பெயர்.

நீர், நீவிர், நீங்கள்—முன்னிலைப் பன்மைப் பெயர்கள்.

அவன், அவள், அது—படர்க்கை ஒருமைப் பெயர்கள்.

அவர், அவர்கள், அவை, அவைகள்—படர்க்கைப் பன்மைப் பெயர்கள்.

இப் பாடத்தில் வந்துள்ள தன்மை, முன்னிலை, படர்க்கைப் பெயர்கள் அமைந்த வாக்கியங்களை எழுதுக.

தான், தாம், தாங்கள், எல்லாம்—இச்சொற்கள் மூவிடங்களிலும் பொதுவாய் வரும். இவற்றைப் பொதுப் பெயர்கள் என்பர்.

(உ - ம்) நான்தான், அவர்தாம், அவையெல்லாம்.

நீர், அவர், அறிஞர், அரசர்—இச்சொற்கள் ஒருவரையே குறிக்கும். ஆயினும் உயர்வு கருதி ஒருமையில் கூறுமல் பன்மையிலேயே கூறுதல் வழக்கம். இங்ஙனம் வருவதற்கு உயர்வுப் பன்மை என்று பெயர்.

# 6. மின்னலும் இடியும்




பெஞ்சமின் பிராங்க்லின்

மழைக்காலத்தில் மின்னல் மின்னுவதையும் இடி இடிப்பதையும் நீங்கள் கண்டும் கேட்டும் இருக்கின்றீர்களன்ரே? அம் மின்னல் எதனுல் உண்டாகின்றது? இடி எப்படி ஏற்படுகின்றது? என்பனவற்றைப் பற்றி நீங்கள் சிந்திப்பதுண்டா? நம்முடைய முன்னேர்கள் மின்னலை மின்னெளியாள் என்ற பெண்ணுகவும், இடியை ஓர் அசுரனுகவும் கற்பனை செய்தனர். இடியசுரன் நடக்கும் காலடி யோசையயே இடியென்றும், அவனுக்குப் பகைவனும் பெரு வீரனுமாகிய அருச்சுனனை அழைத்தால் அவன் ஓடி ஒளிவானென்றும் கூறினர். அதனுலேயே இன்றும் கிராமங்களில் வாழும் மக்கள் இடி இடிக்கும்போது 'அர்ச்சுன! அர்ச்சுன' என்று கூவுவது வழக்கமாயுள்ளது. இவ்வாறு கதை புனைந்து தம் கற்பனைத் திறமையைக் காட்டினரே யொழிய அதன் உண்மையை

அறிய நம் நாட்டில் ஒருவரும் முயலவில்லை. ஆனால் அமெரிக்க நாட்டைச் சேர்ந்த பெஞ்சமின் பிராங்க்லின் என்பவர் இவ்வுண்மையைக் கண்டறிந்தார்.

பெஞ்சமின் பிராங்க்லின் வானில் தோன்றும் மின்னலும் இடியும் மின்சாரப் பாய்ச்சலாலேயே ஏற்படுகின்றன என்று எண்ணினர். ஆனால் அதனைச் சோதித்துப் பார்க்க முடியவில்லை. அவர் எங்ஙனமேனும் அவ்வுண்மையைக் கண்டறிய விரும்பினர். அதனால் அவர் நன்கு சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்தார்.

பெஞ்சமின் பட்டுத் துணியால் ஒரு பெரிய காற்றாடி செய்தார்; அதில் கூர்மையான இரும்புக் கம்பியை இணைத்தார்; நீளமான சணல் கயிற்றில் அக் காற்றாடியைக் கட்டி இடியும் மின்னலும் நிறைந்த மாரிக்காலத்தில் அதனைப் பறக்க விட்டார்; கயிற்றின் மறுமுனையில் ஒரு சாவியைக் கட்டித்தொங்கவிட்டார்; மின்சாரப் பாய்ச்சல் ஏற்பட்டால் இடையூறு ஏற்படாதபடி பட்டுத் துணியைக் கயிற்றில் சுற்றி அதனைப் பிடித்துக் கொண்டார். காற்றாடி மிக்க உயரத்தில் பறந்தது. ஒரு மேகம் காற்றாடியை நெருங்கியது. திடீரென்று காற்றாடியின் கயிறு விறைத்து நின்றது. பெஞ்சமின் அப்போது மிக்க கவனத்துடன் சாவியின் முனையைத் தொட்டார். என்ன ஆச்சரியம்! உடனே அவர் கையில் மின் அதிர்ச்சியின் தாக்குதல் ஏற்பட்டது. மேகத்தில் உள்ள மின்சாரமே கயிற்றின் வழியாக இறங்கிக் கையைத் தாக்கியது என்று உணர்ந்தார். இதனால் மேகத்தில் மின்சாரம் உள்ளது என்பது தெளிவாயிற்று. அதற்குப் பிறகு பெஞ்சமின் மின்னலாலும் இடியாலும் நேரும் துன்பங்களை எவ்வாறு தவிர்க்கலாம் என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டார்.

இனி, இத்தகைய ஆற்றலுடைய மின்னலும் இடியும் எப்படி ஏற்படுகின்றன என்பதை அறிவோம்.

உலகில் உள்ள பொருள்கள் யாவும் அணுக்களால் ஆனவை. இவ்வணுக்களில் இரு வகையான மின் ஆற்றல்கள் உள்ளன. ஒன்று நேர் மின் ஆற்றல் (பாஸிடிவ்); மற்றொன்று எதிர் மின் ஆற்றல் (நெகடிவ்). நேர் மின் ஆற்றல் அசையும் தன்மை யுடையது; எதிர்மின் ஆற்றல் அசையாதது. ஒரு பொருளில் உள்ள நேர் மின் ஆற்றல் எதிர் மின்னாற் றல் உள்ள பொருளில் விரைந்து பாயும் இயல்புடைய தாகும். இத்தகைய மின்சாரப் பாய்ச்சலாலேயே மின்னலும் இடியும் உண்டாகின்றன.

சூரிய வெப்பத்தால் நீர் நிலைகளில் உள்ள நீர் ஆவியாக மாறி மேலே செல்லுகிறது. அவ்வாறு செல்லும் நீராவியின்மீது குளிர் காற்றுப் பட்டவுடன் அது நீராக மாறி மழையாகப் பொழிகிறது என்ற உண்மையை நீங்கள் படித்திருப்பீர்கள். இவ்வாறு மழை பொழியும் மேகங்களில் மின்சார சக்தி நிறைந் துள்ளது. அம்மேகங்கள் ஒன்றோடொன்று உராயும் போது நேர் மின் சக்தி எதிர் மின் சக்தியுள்ள இடத் திற்குப் பாய்ந்து செல்கிறது. அவ்வாறு பாய்ந்து செல்லும் மின் சக்தியே மின்னல் என்று வழங்கப்படு கிறது. ஒரு பொருளோடு ஒரு பொருள் உராயும் போது நெருப்புப் பொறி பறப்பதை நீங்கள் கவனித் திருப்பீர்கள். அதனுடன் சட சட என்ற ஓசையும் உண்டாகின்ற தன்றோ? அது போலவே மேகங்கள் உராய்வதால் மின்சாரப் பாய்ச்சல் ஏற்படும்போது பேரொலி உண்டாகின்றது. அவ்வொலியே இடி எனப்படும். அது மேகக் கூட்டங்களிடையே தோன்று


147803

வதால் எதிரொலி உண்டாகிறது. இதனுலேயே இடி நெடு நேரம் தொடர்ந்து கேட்கின்றது.

மின்னலும் இடியும் ஒரே சமயத்தில் தோன்றுவனவே யாம். என்ருலும் நாம் முதலில் மின்னலேத்தான் பார்க்கின்ருேம். சிறிது நேரம் கழித்தே இடி ஒலியைக் கேட்கின்ருேம். சில சமயங்களில் இடியோசை கேட்பதும் இல்லே. இதற்குக் காரணம் என்ன?

ஆறுகளிலோ குளங்களிலோ துணி துவைப்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். தூரத்திலிருந்து பார்த்தால் துணி கல்லின்மீது படும்போது ஓசை கேட்பதில்லே. துணியை அவன் உயர்த்திய பின்பே ஓசை கேட்கிறது. அருகில் சென்று பார்த்தால் துணி கல்லில் மீது படும்போதே ஓசை உண்டாவதைக் கேட்கிருேம். இதனுல் ஓசை ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்கு வருவதற்குச் சிறிது நேரம் ஆகிறது என்பது விளங்குகின்ற தன்ருே? ஒலி ஓரிடத்திலிருந்து விநாடிக்கு 1120 அடி தூரமே செல்லுகின்றது என்று ஆராய்ச்சியாளர் கணக்கிட்டுள்ளனர். ஆனுல் அதே சமயத்தில் ஒளி 1,86,000 மைல் தூரம் செல்கின்றது எனவும் ஆராய்ந்தறிந்துள்ளனர். ஓரிடத்தில் ஒளியும் ஒலியும் ஒரே சமயத்தில் உண்டானுல் 1120 கஜ தூரத்தில் உள்ளவன் ஒளியை உடனே காணமுடியும். ஆனுல் ஒலியையோ, மூன்று விநாடிகள் கழித்தே கேட்க முடியும். ஒளிக்கும் ஒலிக்கும் உள்ள இந்த வேறுபாட்டாலேயே நெடுந்தூரத்தில் உண்டாகின்ற மின்னலே நாம் உடனே காண முடிகிறது. இடியோசையைச் சிறிது நேரம் கழித்தே கேட்க முடிகிறது. இடியோசை நெடுந்தூரத்தில் உண்டாகுமானுல் அவ்வோசையை அறிந்துகொள்ளும் சக்தி நம் காதுகளுக்கில்லாமையால் அவ்வொலி நமக்குக் கேட்பதில்லே.

சில சமயங்களில் மேகங்களில் தோன்றும் மின் சாரப் பாய்ச்சல் பூமியைத் தாக்குவதும் உண்டு. அதனையே நாம் இடி விழுதல் என்று கூறுகிறோம். இடி விழுந்தால் அதனால் தாக்கப்படும் பொருள்கள் யாவும் அழிந்து விடும். பெரிய பெரிய கட்டடங்களும் இடிந்து விடும். மரங்களின் மேல் விழுந்தால் அவை பட்டுப்போகும். பெரும்பாலும் பெரிய கட்டடங்களின் மீதும் உயரமான மரங்களின் மீதுமே இடி விழும். அவை உயரமாக இருக்கின்றமையால் மின்சார சக்தி எளிதாக அவைகளில் பாய்கின்றமையே அதற்குக் காரணமாகும். மேலும் மின் சக்தி நீரில் எளிதாகப் பாயும். இதனால் தான் மின்னலும் இடியுமுண்டாகும் காலங்களில் பெரிய கட்டடங்களிலும், மரங்களின் அடியிலும், ஆறு, குளம் முதலியவற்றின் கரைகளி லும் நிற்கலாகாது என்று நம் முன்னோர் கூறினர்.

இங்ஙனம் இடியினால் ஏற்படும் இடையூறுகளை நீக் கவே பெஞ்சமின் பிராங்க்லின் பெரிதும் முயன்றனர். அவர் செய்த ஆராய்ச்சியின் பயனாக இடிதாங்கி என்ற கருவியைக் கண்டறிந்தனர். காற்றாடி மூலமாக மின்சார சக்தியைப் பூமிக்குக் கொண்டு வர முடிந்த தன்றோ? அதனை ஆதாரமாகக் கொண்டே இக் கருவி அமைக்கப்பட்டது. உயரமான கட்டடங்களின் உச்சி யில் கூர்மையான இரும்புக் கம்பியை நாட்டி, அதி லிருந்து நீளமான ஒரு கம்பியைப் பூமிவரை கொண்டு வந்து மண்ணில் புதைத்து விடவேண்டும். அங்ஙனம் செய்தால் கட்டடத்திற்கு மின்னலால் எத்தகைய இடையூறும் நேராது என்று அவர் முடிவு செய்தார். மின்சாரம் இரும்பில் எளிதாகப் பாயும்; ஆதலால் இடி கட்டடத்தின் உச்சியில் உள்ள இரும்பின் வழியாகப் பாய்ந்து பூமியில் சென்று மறைந்து விடும். அதனால்

கட்டடத்திற்குப் பழுது நேராது என்பது அவர் எண்ணம். அதனை ஆராய்கையில் அஃது உண்மை யாயிற்று. அதிலிருந்து இடியால் ஏற்படும் இடையூறு கள் குறைந்தன. இன்று மிகப் பெரிய கட்டடங்களில் எல்லாம் இடி தாங்கியை நீங்கள் காணலாம்.

இத்தகைய அரிய சாதனத்தைக் கண்டறிந்து உலகுக்கு வழங்கிய பிராங்க்லினுக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோ மன்றோ?

### அருஞ்சொல் விளக்கம்

சிந்திப்பது - நினைப்பது; அசுரன் - அரக்கன்; கற்பனை செய்தனர் - கற்பித்துக் கூறினர்; அருச்சுனன் - பஞ்சபாண்டவர் களில் மூன்றுமவன்; புனைந்து - கற்பித்து; திறமை - வன்மை; வான் - ஆகாயம்; சோதித்து - ஆராய்ந்து; முனை - ஓரம், நுனி; மாரி - மழை; இடையூறு - தடை; விறைத்து - நேராக; தவிர்க்க லாம் - போக்கலாம்; அணு - கண்ணுக்குத்தெரியாத நுண்பொருள்; விரைந்து - வேகமாக; நீர்நிலை - ஏரி, குளம் முதலியன; உராயும் போது - மோதும்போது; பேரொலி—(பெருமை + ஒலி)—மிக்க ஓசை; விநாடி - மிகச் சிறிய கால அளவு; வேறுபாடு—வித்தி யாசம்; ஆதாரம் - அடிப்படை; பழுது - குற்றம், அழிவு; சாதனம் - கருவி.

### வினுக்கள்

1. கிராமத்தில் வாழும் மக்கள் இடி இடிக்கும்போது அர்ச் சுனு என்று கூறக் காரணம் என்ன?

2. பெஞ்சமின் பிராங்க்லின் என்பவர் யார்? அவர் மேகத் தில் மின்சாரம் உள்ளது என்பதை எவ்வாறு கண்டு பிடித்தார்?

3. நேர் மின் ஆற்றல், எதிர் மின் ஆற்றல் - இவற்றின் இயல்புகள் யாவை?

4. மின்னலும் இடியும் எவ்வாறு உண்டாகின்றன?

5. இடியோசை தொடர்ந்து கேட்கப்படுவதற்குக் காரணம் யாது?

6. ஒளி, ஒலி—இவை பரவும் வேகத்தில் வேறுபாடு உண்டு என்பதை ஓர் உதாரணத்தால் விளக்குக.

7. இடி விழுதல் என்ருல் என்ன? இடி எவ்விடங்களில் எளிதாகச் சொல்லும்?

8. இடி தாங்கி அமைக்கும் முறையையும் அதனுல் ஏற்படும் பயன்களையும் எழுதுக.

## மொழிப் பயிற்சி

1. வாக்கியங்களில் பயன்படுத்துக :—கற்பனை, இடையூறு, எளிதாக, ஆதாரம், சாதனம்.

2. பிரித்து எழுதுக :—சிந்திப்பதுண்டா, மின்னொளியாள், இரு வகை, பேரொலி.

3. எதிர்ப்பதம் கூறுக :—நீளம், உயரமாக, எளிதாக, குறைந்தன.

4. பொருள் வேறுபாடு அறிக :—ஒளி — ஒலி என்பவற்றில் ஒளி என்பது வெளிச்சத்தையும், ஒலி என்பது ஓசையையும் குறிக்கும்.

இங்ஙனமே கீழ் வரும் சொற்களின் பொருள் வேறுபாட்டை அறிந்து உம் சொந்த வாக்கியங்களில் பயன்படுத்துக.

| | | |
|---|---|---|
| அறிய | — | அரிய |
| குளம் | — | குலம் |
| இறங்கி | — | இரங்கி |
| மாறி | — | மாரி |
| காளை | — | காலை |
| அளித்து | — | அழித்து |

## இலக்கணப் பயிற்சி

கந்தன் வந்தான்; நான் கந்தனைக் கண்டேன்; கந்தனுல் மரம் வெட்டப்பட்டது; கந்தனுக்குத் தந்தேன்; கந்தனில் முருகன் பெரியவன்; கந்தனது புத்தகம்; கந்தனிடம் பணம் உள்ளது, கந்தாவா.

இவ் வுதாரணங்களைக் கவனியுங்கள். கந்தன் என்ற ஒரே சொல் ஒவ்வொரு வாக்கியத்திலும் வெவ்வேறு பொருளைத் தரு

கிறது. அதனோடு சேர்ந்துள்ள ஐ, ஆல், கு, இல், அது, இடம் என்ற சொற்களே அதற்குக் காரணம். இவ்வாறு ஒரு பெயர்ச் சொல்லின் பொருளை வேறுபடுத்தும் சொற்களுக்கு வேற்றுமை உருபுகள் என்று பெயர். வேற்றுமை எட்டு வகைப்படும்.

முதல் வேற்றுமை : உருபு இல்லை.

| | | |
|---|---|---|
| ஐ | இரண்டாம் | வேற்றுமை உருபு. |
| ஆல், ஒடு, ஓடு | மூன்றும் | வேற்றுமை உருபு. |
| கு | நான்காம் | வேற்றுமை உருபு. |
| இல், இன் | ஐந்தாம் | வேற்றுமை உருபு. |
| அது, உடைய | ஆறும் | வேற்றுமை உருபு. |
| இல், இடம், கண் | ஏழாம் | வேற்றுமை உருபு. |

எட்டாம் வேற்றுமைக்கு உருபு இல்லை. பெயர்ச் சொல்லின் இறுதி சிறிது மாறுபட்டு ஒருவரை அழைக்கும் பொருளில் வருவது எட்டாம் வேற்றுமையாம்.

(உ - ம்.) கந்தா வா. என்பதில் கந்தன் என்ற சொல் கந்தா என்று திரிந்து வந்தது காண்க.

**வேற்றுமைகளின் பொருள்கள் :**

| | வேற்றுமை | பொருள் |
|---|---|---|
| 1. | முதல் வேற்றுமை | கருத்தா |
| 2. | இரண்டாம் வேற்றுமை | செயப்படுபொருள் |
| 3. | மூன்றும் வேற்றுமை | கருவி, கருத்தா, உடனிகழ்ச்சி |
| 4. | நான்காம் வேற்றுமை | ஏற்றுக் கோடல் |
| 5. | ஐந்தாம் வேற்றுமை | நீங்கல், ஒப்பு, எல்லை, ஏது |
| 6. | ஆறும் வேற்றுமை | தற்கிழமை, பிறிதின் கிழமை |
| 7. | ஏழாம் வேற்றுமை | இடம் (தற்கிழமை, பிறிதின் கிழமை) |
| 8. | எட்டாம் வேற்றுமை | விளித்தல் (அழைத்தல்) |

# 7. முத்துக் குளித்தல்

நவமணிகளில் ஒன்று முத்து. முத்துக் குளிக்கும் தொழில் நம் நாட்டின் மிகப் பழைய தொழிலாகும். 'பூழியர்கோன் தென்னாடு முத்துடைத்து' என்று பாண்டிய நாடு ஔவையாரால் பாராட்டப் பட்டது. பாண்டி நாட்டில் குளித்தெடுத்த முத்துக்கள் 'ரோமாபுரி அரசியர் முடிகளை அலங்கரித்தன' என்று சரித்திரங்கள் மூலம் அறியலாம். இதிலிருந்து மிகப் பழங் காலத்திலேயே தமிழ் நாட்டார் பிற நாட்டவருடன் முத்து வாணிகம் செய்துவந்தமை விளங்கும். அரச மரபினரும் பெருஞ் செல்வர்களும் முத்துக்களை மிகவும் விரும்பினர். நம் நாட்டு அரசிளங் குமரர்களும் பிறரும் நன்முத்துக்களைச் சேகரிப்பதில் ஆர்வமுடையவரா யிருந்தனர். முத்து நம் நாட்டின் செல்வ நிலையை உயர்த்துவதற்கும் காரணமாக இருந்தமையால் முத்துக் குளிக்கும் தொழில் நம் நாட்டில் பரம்பரையாக நடந்த உயர்ந்த தொழிலாக விளங்கி வந்தது.

நம் தமிழ் நூல்களில் முத்து மிகச் சிறப்பாகப் போற்றப்பட்டுள்ளது. பெண்களின் வெண்ணிறமான பற்களுக்கு உதாரணமாக முத்துக்களைத் தமிழ் நூல்கள் கூறுகின்றன. அரசர்கள் தங்கள் வெண்கொற்றக் குடைகளில் முத்துமாலைகளைக் கட்டி அழகு செய்வர் என்றும், முத்துக்களை மாலைகளாகக் கோத்து ஆண்களும் பெண்களும் அணிந்துகொள்வர் என்றும் இலக்கியங்கள் மூலமாக விளங்குகின்றன. ஆரம் என்ற சொல்லே தமிழ் நூல்களில் முத்து மாலையைக் குறிப்பதாக வழங்கிவருகிறது. முத்தைப்போன்ற முறுவல், முத்து முத்தான நீர், முத்தைப்போன்ற எழுத்துக்கள் என்று கூறும் வழக்கத்தால் தமிழ்நாட்டு

மக்கள் முத்தின் ஒளி, குளிர்ச்சி, உருவம் ஆகிய வற்றை எவ்வளவு விரும்புகின்றனர் என்பது விளங்கு மன்றோ ?

இத்தகைய சிறந்த முத்து கடலில் உள்ள முத்துச் சிப்பிகளில் உற்பத்தியாகின்றது. தமிழ் நூல்களில் கரும்பு, மூங்கில், யானைத்தந்தம் போன்ற பல பொருள்களிலும் முத்துக்கள் பிறக்கின்றன என்று கூறப்பட்டுள்ளது. இவை எல்லாவற்றினும் கடலில் சிப்பியில் பிறக்கும் முத்தே உயர்வானதாகும். முத்து என்றால் சிறப்பாகச் சிப்பி முத்தையே குறிக்கும். முத்துச் சிப்பிகளில் முத்து எங்ஙனம் உற்பத்தி யாகிறது என்று அறிவோம்.

நாம் ஆறுகளில் காணும் கிளிஞ்சல்களைப்போலப் பெரியனவாகவும் வட்டமானவையாகவும் உள்ள ஏராளமான கிளிஞ்சல்கள் கடலின் அடியில் குறிப் பிட்ட ஆழத்தில் பரவியுள்ளன. அக்கிளிஞ்சல்கள் யாவும் ஊர்ந்து செல்லும் நத்தையினங்களின் கூடு களே என்பது உங்கட்குத் தெரியுமன்றோ? சில சமயங்களில் எதிர்பாராத வகையில் சிறு மணல்கள் சிப்பிகளின் இடைவெளிகளின் வழியே உள்ளே சென்றுவிடும். அங்ஙனம் சென்ற மணல் திரும்பி வர இயலாமல் அங்கேயே தங்கிவிடும். மணலின் உறுத்தலால் நத்தை நெளியும். அப்படி நெளியும் போது அதன் உடலிலிருந்து ஒருவகை நீர் வெளிப் பட்டு அம்மணலை மூடிக்கொள்ளும். அங்ஙனம் மூடிக் கொண்ட நீரே ஐந்தாண்டுகள் கழித்துப் பேரொளி யுடைய முத்தாக மாறுகிறது. ஐந்தாண்டுகளுக்குள் எடுத்த முத்துக்கள் நன்கு முதிராத காரணத்தால் அவ்வளவு சிறந்தனவாகா.

முத்துக்கள் விளையும் கடற்பகுதிகள் நம் நாட்டில்

மட்டுமன்றி உலகின் பல பாகங்களிலும் உள்ளன. விலையுயர்ந்த நன்முத்துக்கள் சில இடங்களில்தான் கிடைக்கின்றன. இலங்கைத் தீவை அடுத்துள்ள **மன்னூர்** குடாவிலும், தூத்துக்குடிக்கு அருகில் உள்ள **பிரவை** என்னும் இடத்திலும், **பாரசீகக் குடாக்கடலிலும்** மிகச் சிறந்த நன்முத்துக்கள் கிடைக்கின்றனவாம். பண்டைக் காலத்தில் பாண்டிய நாட்டுத் துறைமுகமாக விளங்கிய **கொற்கையில்** மிகச் சிறந்த முத்துக்கள் விளைந்தன என்று தெரிகிறது. இவை யாவும் வெண்ணிற முத்துக்களே யாகும். மெக்ஸிகோவிலும் கலிபோர்னியாவிலும் ஏனைய நிற முத்துக்கள் கிடைக்கின்றன. அவை அவ்வளவு சிறந்தன அல்ல.

முத்து தோன்றியது முதல் அணியாக அணியப் படும்வரை அதன் சரித்திரம் மிக விசித்திரமானது. முத்துக்குளிக்கும் தொழில் யாரால் எப்பொழுது கண்டுபிடிக்கப்பட்டது என்று துணிந்து கூற இயலாது. கடலின் அடியில் இருக்கும் முத்துக்களைச் சேகரிக்கும் தொழிலுக்கு **முத்துக்குளித்தல்** என்று பெயர். அத்தொழில் மிகவும் கடினமானது. கடலில் ஐம்பது முதல் எழுபத்தைந்து அடிவரை ஆழமான இடங்களிலேயே முத்துச் சிப்பிகள் பரவியிருக்கும். தண்ணீருள் நெடுநேரம்வரை மூச்சை அடக்கிக் கொண்டு இருக்கும் ஆற்றல் படைத்தவர்களே அவ் விடம் சென்று முத்துச் சிப்பிகளை எடுத்துவர இயலும். நன்முத்துக்கள் மிக்க விலையுடையனவாக இருந்தமையால் பலர் தம் உயிரையும் பொருட்படுத் தாமல் முத்துக்குளிக்கும் தொழிலில் ஈடுபட்டனர். இந்தியாவில் பழைய காலம் முதல் இத்தொழில் சிறப்பாக நடைபெற்றுவருகிறது.

முத்துக் குளிப்பதற்கு ஏற்ற பருவம் மே மாதம் மத்தியிலிருந்து அக்டோபர் மாதம்வரை ஆகும். இப் பருவத்தில் முத்துக் குளிப்போர் ஐம்பது அறுபது பேர்கள் கூட்டமாகப் படகில் ஏறி முத்துச்சிப்பிக ளுள்ள கடற்பகுதியை அடைவர். நெடுநேரம் மூச்சை அடக்கும் வன்மையுடையவர்கள் உடல் முழுதும்



ஆமணக்கெண்ணெயைப் பூசிக்கொண்டு நீரில் மூழ்க ஆயத்தமாவர். விரைவில் நீருள் மூழ்குவதற்கும், ஆழத்திலிருந்து விரைந்து மேலே வருவதற்கும் இஃது உதவியாக இருக்குமாம். மேலும் அவ்வெண்ணெயின் வாசனையால் கடலுள் வாழும் உயிர்களின் தொந்தரவும் நேராது போலும்! பின்பு அவர்கள் கடலின் உள்ளே தம்மை வேகமாக இழுத்துச் செல்வதற்கு நீளமான கயிற்றில் கட்டப்பட்ட கருங்கல்லில் உள்ள துவாரத்தில் தமது வலக் காலை ஊன்றிக்கொள்வார் கள். அக்கயிற்றின் மற்றொரு முனை கப்பலின் பாய் மரத்தில் நன்றாகக் கட்டப்பட்டிருக்கும். அக் கருங்கல்

கட்டிய கயிற்றின் உதவியால் அவர்கள் விரைந்து நீருள் மூழ்கி முத்துச் சிப்பிகள் இருக்குமிடத்தை அடைந்து தம்முடன் கொண்டுவந்த கூடைகளில் அச்சிப்பிகளை வாரிப் போட்டுக்கொள்வர்; நீருள் இனி இருக்க இயலாது என்று தோன்றும்போது கயிற்றை அசைப்பார்கள். உடனே படகில் உள்ளவர் கயிற்றை வேகமாக இழுத்து அவர்களைப் படகில் சேர்ப்பர். இவ்விதம் ஒவ்வொருவரும் ஒரு நாளைக்கு எழுபது எண்பது தடவைகள் மூழ்கி முத்தெடுப்பர். இது முத்துக் குளிக்கும் பழைய முறையாகும்.

தற்காலத்தில் இத்தொழில் இயந்திரங்களின் உதவியால் புதிய முறையில் நடைபெற்று வருகிறது. முத்துக் குளிப்பவர் இரும்புக் கவசம் அணிந்து கொள்வர். இதனுல் விரைந்து நீருள் மூழ்க முடிவதுடன் நீர்வாழ் உயிர்களாலும் இவர்களுக்குத் தீங்கு நேராது. இவர்களுக்கு வேண்டிய பிராணவாயு மேலே இருந்து இரப்பர்க் குழாய் மூலம் அனுப்பப்படுகிறது. இதன் உதவியால் அவர்கள் மூச்சுவிடக் கஷ்டப்படாமல் நெடுநேரம் நீரில் இருந்து முத்துச் சிப்பிகளைச் சேகரிக்க முடியும். இத்தொழில் பாரசீக வளைகுடாவில் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளாக நடைபெற்றுவருகிறது. அவர்கள் இன்றும் பழைய முறையையே பின்பற்றி முத்துக் குளிக்கின்றனர். அறுநூறு மைல் நீளமும் நூறு மைல் அகலமும் உள்ள அவ்வளைகுடாவில் ஏறக்குறைய இலட்சம் பேர்களுக்குமேல் அத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர்.

இங்ஙனம் அரும்பாடுபட்டுக் கொண்டுவரப்படும் முத்துச் சிப்பிகள் ஒரு வாரம்வரை பூமிக்குள் புதைத்து வைக்கப்படும். பின்னர் அவற்றை எடுத்துக் கொதி நீரில் போட்டுத் தூய்மை செய்வர். பின்பு

அவற்றை வகை வகையாகப் பிரித்துச் சிப்பிகளை உடைத்து முத்துக்களை எடுப்பர். சில சிப்பிகளில் பெரிய முத்துக்களும் சிலவற்றில் சிறிய முத்துக்களும் காணப்படும். சிலவற்றில் முத்துக்கள் இல்லாமற் போவதும் உண்டு.

பின்னர் அம்முத்துக்கள் மிக்க ஒளியுடனும் அழகிய உருவுடனும் காட்சியளிப்பதற்கு உரிய பல வேலைகள் செய்யப்படுகின்றன. அத்தொழில்கள் மிகவும் நுட்பமானவைகளாம். அத்தொழில்களில் வல்லவர் பரம்பரையாக நம் நாட்டில் வாழ்ந்துவரு கின்றனர். அவர்கள் சூரத் பகுதியில் மிகுதியாக வசிக்கின்றனர். ஆகையினால்தான் **சூரத் முத்து** உயர்வானதாக மதிக்கப்படுகிறது. கைதேர்ந்த பணி யாளராகிய அவர்கள் முத்துக்களை உருவாக்கி மெரு கிட்டுத் துளை போடுகிறார்கள். முத்துக்களை உரு வாக்குவதன் மூலம் முத்துக்கள் உருண்டு திரண்டு கவர்ச்சியான உருவத்தை அடைகின்றன. மெருகிடு வதால் முத்தின் இயற்கையான ஒளி மேலும் அதிக மாகி அது மிக்க மதிப்புடையதாகிறது. முத்தி னுடைய அழகும் மதிப்பும் மெருகிடுவதையே பொறுத் துள்ளன. முத்துக்களுக்குத் துளை போடுவது அரிய கலையாகும். அதற்கு நுட்பமான பல கருவிகள் பயன்படுகின்றன. இவ்வாறு செம்மைப்படுத்திய முத்துக்களை அப்பணியாளர்கள் சரம் சரமாகக் கோத்து வாணிகத்திற்கு அனுப்புகின்றனர்.

முத்துக்குளித்தல், முத்தைத் தூய்மைப்படுத்தல், தரம் பிரித்தல், உருவாக்கல், துளையிடுதல், மெருகிடு தல், ஜதைப்படுத்தல் என்று பலவிதத் தொழில்களைத் தன்னகத்தே கொண்டிருப்பதால் முத்து வாணிகம் நம் நாட்டில் எண்ணற்ற மக்களுக்கு வேலை கொடுக்

கும் உயரிய தொழிலாக விளங்கிவருகின்றது. நம் நாட்டில் பம்பாய் முத்து வாணிகத்தில் சிறந்த நகரமாம். மிகச் சிறந்த முத்துக்கள் அமெரிக்கா, ஐரோப்பா முதலிய நாடுகளில் நல்ல மதிப்பைப் பெறுகின்றன. பாரிஸில் இந்திய நாட்டுக் கம்பெனிகள் பல முத்து வாணிகம் செய்துவருகின்றன.

முத்துக்களில் போலிகளும் உண்டு. போலிகளைக் கண்டறிவதற்கு இக்காலத்தில் எக்ஸ்ரே கருவி உபயோகப்படுகிறது. மிகச் சிறந்த முத்து மிகவும் விலை மதிப்புடையதாகும். சிறிது காலத்துக்கு முன்பு சிறந்த முத்து ஒன்று அரபி தேசத்தில் பதினொரு லட்சம் பவுனுக்கு விற்கப்பட்டது என்றால் முத்தின் மதிப்பு எவ்வளவு என்று எண்ணிப்பாருங்கள். அணிகலன்களுக்கோ பிறவற்றிற்கோ தகுதியில்லாத முத்துக்களை நீறாக்கிச் சுண்ணாம்பு செய்வதும் உண்டு.

இங்ஙனம் பலவகையிலும் நமக்குப் பயன்படும் நம் நாட்டின் பண்டைத் தொழிலாகிய முத்துக்குளிக்கும் தொழிலும், முத்துவாணிகமும் அழிந்துவிடாமல் காக்கவேண்டியது இந்திய மக்களின் சிறந்த கடமையாகுமன்றோ!

### அருஞ்சொல் விளக்கம்

நவமணிகள் - வயிரம், மரகதம், மாணிக்கம், புஷ்பராகம், நீலம், கோமேதகம், வயிடூரியம், முத்து, பவழம் என்பன. பூழியர்கோன் - பாண்டிய மன்னன்; மரபு - வம்சம்; சேகரித்தல் - திரட்டுதல்; வெண்கொற்றக்குடை - அரசன் தன் வெற்றிக்கு அடையாளமாகக் கொண்ட வெண்மை நிறமுள்ள குடை; முறுவல் - பல்; விசித்திரமானது - வேடிக்கையானது; இரும்புக் கவசம் - இரும்புச்சட்டை; வளைகுடா × விரிகுடா; நானிலம் - உலகம் : குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்கு வகையான நிலங்களை உடையது.

### வினாக்கள்

1. தமிழ்நாடு முத்து வாணிகத்தில் சிறந்திருந்தது என்பதனை எதனால் அறியலாம்?

2. முத்தை மக்கள் விரும்பக் காரணம் யாது?

3. முத்துக்கள் எவ்விடங்களில் பிறக்கின்றன?

4. கடலில் முத்து உண்டாகும் விதத்தை விளக்குக.

5. முத்து எவ்வெவ்விடங்களில் மிகுதியாகக் கிடைக்கிறது?

6. முத்துக்குளிப்பவர் கையாண்ட பழமையான முறைகள் யாவை?

7. தற்காலத்தில் முத்து எவ்வாறு சேகரிக்கப்படுகிறது?

8. சிப்பியிலிருந்து எடுக்கப்பெற்ற முத்து எங்ஙனம் உருவாக்கப்படுகிறது?

9. முத்திலிருந்து நாம் அறியும் உயர்ந்த நீதி யாது?

### மொழிப் பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் எழுதுக:—ஈடுபட்டனர், ஆயத்தம், உருண்டு திரண்டு, சரம் சரமாக, விலையுயர்ந்த.

2. பிரித்தெழுதுக:—நீருக்கி, நானிலம், வெண்ணிறம், உருவாக்கல், நத்தையினங்கள், எழுபத்தைந்து.

3. கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைத்து எழுதுக:—

(i) முத்துக் குளிப்பதற்கு ஏற்ற பருவம் —— இருந்து —— வரை ஆகும்.

(ii) இரப்பர் குழாய் மூலம் —— அனுப்பப்படுகிறது.

(iii) —— முத்து உயர்வானதாக மதிக்கப்படுகிறது.

(iv) நம் நாட்டில் —— முத்து வாணிகத்தில் சிறந்த நகரமாம்.

(v) முத்துக்களில் போலிகளைக் கண்டறிவதற்கு —— —— உபயோகப்படுகிறது.

4. அறிந்துகொள்க:—நானிலம் : தமிழ் மக்கள் நிலத்தை நான்கு வகைகளாகப் பிரித்தனர். குறிஞ்சி - மலையும் மலைசார்ந்த நிலமும்; முல்லை - காடும் காடு சார்ந்த நிலமும்; மருதம் - வயலும் வயல் சார்ந்த நிலமும்; நெய்தல் - கடலும் கடல் சார்ந்த நிலமும்.

### இலக்கணப் பயிற்சி

1. எத்தனை நாட்கள் நான் வறுமையால் வாடுவேன்.

2. நீ என் பாட்டில் குற்றம் கூறினாய்.

3. அவன் மிகவும் மனம் மகிழ்ந்தான்.

இவைகளில் வினைமுற்றுக்களைக் கவனி. வாடுவேன் என்பது பேசுபவன் செயலைக் குறிக்கிறது. கூறினாய் என்பது முன்னிருப்பவன் செயலை உணர்த்துகின்றது. மகிழ்ந்தான் என்பது அயலான் ஒருவன் செயலைத் தெரிவிக்கின்றது. பேசுபவன் செயலைக் குறிக்கும் வினை **தன்மை வினை** எனப்படும். முன்னிருப்பவன் செயலைக் குறிக்கும் வினை **முன்னிலை வினை** எனப்படும். அயலான் செயலை விளக்கும் வினை **படர்க்கை வினை** எனப்படும்.

தமிழ்மொழியில் எழுவாயின் திணை, பால், எண், இடம் இவற்றையே பயனிலையும் பெற்றுவரும்.

| | | | | |
|---|---|---|---|---|
| நான் வந்தேன் | — | தன்மை ஒருமை வினைமுற்று | | |
| நாங்கள் வந்தோம் | — | தன்மைப் பன்மை | | ,, |
| நீ வந்தாய் | — | முன்னிலை ஒருமை | | ,, |
| நீங்கள் வந்தீர்கள் | — | முன்னிலைப் பன்மை | | ,, |
| அவன் வந்தான் | — | படர்க்கை | ஆண்பால் | வினைமுற்று |
| அவள் வந்தாள் | — | ,, | பெண்பால் | ,, |
| அவர் வந்தார் | — | ,, | பலர்பால் | ,, |
| அது வந்தது | — | ,, | ஒன்றன்பால் | ,, |
| அவை வந்தன | — | ,, | பலவின்பால் | ,, |

கீழே தரப்பட்டுள்ள கட்டங்களில் முதல் உதாரணத்துக்கு எழுதிக் காட்டியுள்ளது போல ஏனையவற்றுக்கும் திணை, பால், எண், இடம், காலம் இவற்றை எழுதுக.

| சொல் | திணை | பால் | எண் | இடம் | காலம் |
|---|---|---|---|---|---|
| படித்தனன் | உயர் திணை | ஆண் பால் | ஒருமை | படர்க்கை | இறந்த காலம் |
| உண்பாள் | | | | | |
| கண்டோம் | | | | | |
| எழுதினாய் | | | | | |
| மேய்கின்றது | | | | | |
| ஓடுகின்றனர் | | | | | |
| ஓடுகின்றீர்கள் | | | | | |
| எழுதினேன் | | | | | |
| உழுகின்றன | | | | | |

# 8. வட துருவப் பயணம்

(பிரிட்ஜோவ் நான்சென்)

உலகில் இயற்கை அழகுகள் நிறைந்த இடங்கள் பல உள்ளன. அவைகளில் பல மக்களால் சென்று காண முடியாதனவாக இருக்கின்றன. மரம் செடி கொடிகளும் கொடிய வன விலங்குகளும் செறிந்த காடுகளும், கண்ணுக் கெட்டிய தூரம் மணல் பரப்பாகவே காட்சியளிக்கும் பாலைவனங்களும், வானளாவிய சிகரங்களைக் கொண்ட மலைகளும் பலவாம். குளிரால் உறைபனி தோய்ந்த பனிப் பிரதேசங்கள் பல. மக்களால் கடக்க முடியாத பெருங் கடல்களுக் கிடையே அமைந்து விளங்கும் தீவுகளும் பற்பல. இவ்வளவையும் மனிதன் கண்டறிவதென்பது எளிதான செயலா? ஆனால் மனிதன் தன் முயற்சியில் சலிக்கவில்லை. இத்தகைய இயற்கை நலம் வாய்ந்த இடங்களைக் கண்டறிவதிலேயே பேரானந்தம்கொண்ட பலர் தங்கள் முயற்சியால் எவ்வளவோ அரிய இடங்களைக் கண்டறிந்தனர். அம் முயற்சிகளில் ஒன்றே பிரிட்ஜோவ் நான்சென் என்ற அறிஞர் செய்த வட துருவப் பயணமும் ஆகும்.

நான்சென் என்னும் பெரியார் நார்வே நாட்டில் பிறந்தவர். நார்வே நாடு மிகச் சிறிய நாடு. அஃது ஐரோப்பாவில் மிக வடக்கே உள்ளது. ஆதலால் அங்குக் குளிர் மிகுதி. அங்குக் கோடைகாலத்தில் இரண்டு மாதங்கள் பகலாகவே இருக்கும். மழைக் காலத்தில் இரண்டு மாதங்கள் இரவாகவே இருக்கும். அங்கு வாழும் மக்களில் பலர் கடலில் சென்று மீன் பிடிப்பதையே தொழிலாகக் கொண்டுள்ளனர். ஆத

லால் அந்நாட்டில் வாழ்கின்றவர்கள் அந்நாட்டின் தட்ப வெப்ப நிலேக்கு ஏற்ற வலிமையான உடலேயும் அஞ்சா நெஞ்சத்தையும் இயற்கையாகப் பெற்றுள்ள னர். அத்தகைய நாட்டில் பிறந்த நான்செென் அவர்க ளிடமும் இளமையிலேயே அறிவு, ஆற்றல், அஞ் சாமை முதலிய பண்புகள் காணப்பட்டன.

முந்நூறு ஆண்டுகளாக ஆர்டிக் பிரதேசத்தில் பயணம் செய்வதில் பழக்கமுடைய குடும்பத்தில் தோன்றியவர் நான்சென். புதிய இடங்களேக் கண் டறியவேண்டும் என்னும் ஆவல் அவருடைய இரத் தத்திலேயே ஊறியிருந்தது. அதனுல் அவர் வட துருவத்தையும் கண்டறிய வேண்டும் என்று பெரிதும் விரும்பினுர். அதுவரை வட துருவத்தை அடைய முயன்றவர் எவரும் வெற்றிபெற வில்லே. அவர்கள் தோல்வியடைந்தமைக்குக் காரணங்கள் யாவை என்று நான்சென் நுட்பமாக ஆராய்ந்தார். விஞ்ஞான அறிவு வாய்ந்த அவருக்குக் காரணம் நன்கு புலப்பட்டது. ஆதலால் அவருக்கு எங்ஙன மேனும் வடதுருவத்தைக் கண்டறிய வேண்டும் என்னும் துணிவு பிறந்தது. அதனுல் அவர் தம் முடைய விருப்பத்தைச் செய்தித் தாள்களின் மூலம் விளக்கினுர். அவருடைய முயற்சியை எல்லோரும் வரவேற்றனர். நார்வே அரசாங்கம் அவருக்கு வேண்டிய பொருளுதவி செய்ய முன் வந்தது. மற்றும் பலரும் வேண்டிய உதவி செய்தனர். எனவே மிக்க மகிழ்ச்சியடைந்த நான்சென் வடதுருவப் பயணத்திற்கு ஏற்ற பொருள்களேச் சேகரிக்கத் தொடங்கினுர்.

குளிரைத் தாங்கக்கூடிய உறுதியான மெல்லிய கம்பளி ஆடைகள், குளிர் நிறைந்த இடங்களில்

குளிர் தாக்காமல் உறங்குவதற்கு ஏற்ற உறக்கப் பைகள், பனிப் பாறைகளின்மீது வழுக்கிக்கொண்டே செல்ல 'ஸ்கீ' என்ற மரக் கட்டைகள், பனிப் பாறையைப் பிளக்க உதவும் பனிக் கோடரிகள், பனி நிறைந்த இடங்களில் எளிதாகப் பொருள்களை ஏற்றிச் செல்ல உதவும் 'ஸ்லெட்ஜ்' என்ற வண்டிகள், மற்றும் துப்பாக்கி முதலான பலவகை ஆயுதங்கள், பிராணவாயு அடங்கிய குப்பிகள் ஆகியவற்றையெல்லாம் நான்சென் சேகரித்தார். தம் பிரயாணத்திற்காக நான்சென் கப்பல் ஒன்றைக் கட்டுவித்தார். அது பனிப்பாறைகளால் மோதுண்டு அழியாதபடி மிகவும் உறுதியாக அமைக்கப்பட்டது. பனிப் பாறைகள் மோதினாலும் கப்பல் வழுக்கிக்கொண்டு அவற்றைக் கடந்து செல்லக்கூடிய வகையில் அதன் அடிப்பாகம் அமைக்கப்பட்டது. அக்கப்பலில் சுமார் ஐந்தாண்டுகளுக்கு வேண்டிய உணவுப் பொருள்களும் நிரப்பப் பட்டன. இங்ஙனம் நான்சென் வட துருவப் பயணத்தால் நேரக்கூடிய துன்பங்களையெல்லாம் தம் மனத்தாலேயே கற்பனை செய்து பார்த்து அவைகளை யெல்லாம் வெல்வதற்கு ஏற்ற பலவகைக் கருவிகளையும் சேகரித்தார்.

இவ்வாறு அமைக்கப்பட்ட 'பிராம்' என்ற அக் கப்பலின் மூலம் 1893-ஆம் ஆண்டு ஜூன்மாதம் இருபத்து நான்காம் நாள் நான்சென் தம் பயணத்தைத் தொடங்கினார். புதுமையைக் கண்டறிவதில் ஆர்வமுடையவர்களும், அஞ்சா நெஞ்சமும் ஆற்றலும் வாய்ந்தவர்களுமாகிய அவருடைய நண்பர்கள் பன்னிருவர் அவருடன் சென்றனர். சில நாட்கள் யாதோர் இடையூறுமில்லாமல் அவர்கள் பிரயாணம் செய்தனர்.

இங்ஙனமாக நான்சென் மிக்க முன்னேற்பாட்டுடன் செல்லும்போது தூந்திரப் பிரதேசங்களில் வாழும் '**வால்ரஸ்**' என்ற நீர்வாழ் பிராணிகள் கப்பலைச் சுற்றிக்கொண்டன. வால்ரஸ்கள் மிக்க வலிமையுடையன. துப்பாக்கிக் குண்டுகளால்கூட அவற்றைக் கொல்ல முடியாது. அவை பகைவரைக் கண்டால் கூட்டமாகக் கூடித் தாக்கும் குணமுடையன. நான்செனின் கப்பலைச் சுற்றிக்கொண்ட வால்ரஸ்கள் கப்பல் நகர ஒட்டாமல் தடுத்துவிட்டன. எவ்வளவோ முயன்றும் அவற்றை வெருட்ட முடியவில்லை. பிறகு நான்சென் தம் நுண்ணறிவால் சிந்தித்து ஒரு வழி கண்டார். நண்பர்கள் அனைவரையும் ஒரே சமயத்தில் துப்பாக்கி வேட்டுக்களை முழக்கச் சொன்னார். அப் பேரொலி கேட்ட வால்ரஸ்கள் பயந்து ஓடி ஒளித்தன. கப்பலும் நகர்ந்தது. அனைவரும் நான்செனின் நுண்ணறிவைப் பாராட்டினர்.

நான்சென் நடத்திச்சென்ற கப்பல் முன்னேறிச் செல்லச்செல்ல, பனியால் அதன் வேகம் குறைந்தது. கடல்நீர் எல்லாம் பனிக்குழம்பாக இருந்தமையால் கப்பலால் விரைந்து செல்ல முடியவில்லை. முடிவில் செப்டம்பர் மாதத்தில் கப்பல் மேலே செல்ல முடியாமல் நின்றேவிட்டது. அங்கெல்லாம் கடல்நீர் முழுவதும் பனிப்பாறைகளாக இறுகிவிட்டது. அப் பனிப்பாறைகள் கப்பலின் நாற்புறமும் சூழ்ந்து கொண்டமையால் கப்பலை அசைக்கக்கூட முடியவில்லை. நான்சென் இந்நிலையை எதிர்பார்த்தே எல்லா ஏற்பாடுகளையும் செய்தாராகையால் அவர் உடனே கப்பலைவிட்டிறங்கிப் பனிப் பாறைகளின் மீது நடந்து சென்றே வடதுருவத்தை அடைவ

தென்று முடிவு செய்தார். உடன் சென்ற நண்பர் களில் **ஜோகன்ஸன்** என்பவரைத் தவிர மற்றவர் யாவரும் அவர் முடிவைக் கேட்டு அஞ்சினர்.




நான்செென் அவர்களைக் கப்பலிலேயே இருக்குமாறு கூறிவிட்டு ஜோகன்ஸனை மட்டும் அழைத்துக் கொண்டு புறப்பட்டார்.

நான்செென் தமக்கு வேண்டிய உணவுப் பொருள் கள் முதலியவற்றையும் பனியாறுகளைக் கடக்க உதவும் **கயாக்** என்ற படகினையும் ஏனைய பொருள் களையும் ஸ்லெட்ஜ் வண்டிகளில் கட்டி நாய்களை இழுத்துவரச் செய்து நண்பருடன் வடதுருவம் நோக்கிச் சென்றார். அவர்கள் வழியில் அடைந்த இன்னல்கள் அளவற்றன. சில இடங்களில் மலை போல எதிர் நிற்கும் பனிப் பாறைகளை ஸ்கீயின்

உதவியால் கடந்தனர். இடையிடையே குறுக்கிட்ட பனியாறுகளைப் படகின் உதவியால் தாண்டினர்; இரவானால் கூடாரமடித்துத் தங்குவர். இரவு முழுவதும் அவர்கள் உறக்கப் பைகளில் புகுந்துகொண்டே குளிரால் வருந்தாமல் தம்மைக் காத்துக் கொள்வர்.

ஒரு சமயம் நான்செனும் அவர் நண்பரும் ஒரு பனியாற்றில் தம் படகுகளைக் கட்டிவிட்டுக் கரையில் இளைப்பாறத் தொடங்கினர். அப்படகுகளில் ஒன்று நீரின் வேகத்தால் கட்டவிழ்த்துக் கொண்டு செல்லத் தொடங்கியது. அது கண்டார் நான்சென். அப்படகிலேயே அவர்கட்கு வேண்டிய உணவுப்பொருள்கள் முதலிய யாவும் உள்ளன. அதனை இழந்தால் அவர்கள் உயிரை இழக்க வேண்டியதுதான். ஆகையால் தம் உயிரையும் பொருட்படுத்தாது நான்சென் அப்பனியாற்றில் பாய்ந்தார். குளிர்ச்சியால் உடலில் இரத்தம் உறையத் தொடங்கியது. எனினும் நான்சென் தம் உடல் வலிமையால் நீந்திச் சென்று படகைப் பிடித்துக் கரைசேர்த்தார். ஆனால் அதற்குள் அவருடல் விறைத்துவிட்டது. அவர் உணர்விழந்தார். அவர் நண்பர் ஜோகன்ஸன் அரும்பாடுபட்டு அவருடம்பில் சூடுண்டாக்கி உயிர் பிழைக்கச் செய்தார். மற்றொருமுறை அப்பிரதேசத்தில் உள்ள வெண் கரடி ஜோகன்ஸனைப் பற்றிக்கொண்டது. ஜோகன்ஸனும் அதனை இறுகக் கட்டிக்கொண்டார். விட்டுவிட்டால் அஃது அவரைக் கொன்றுவிடும். அதனாலேயே அவர் அவ்வாறு செய்தார். கரடி அவரைத் தூக்கிக்கொண்டு ஓட ஆரம்பித்தது. அதனை அறிந்த நான்சென் தந்திரமாக அதனைத் துப்பாக்கியால் சுட்டு வீழ்த்தி நண்பரைக் காப்பாற்றினார்.

இவ்வாறெல்லாம் பல இடையூறுகளை அடைந்து

முன்னேறிய அவ்விருவரும் எண்பத்தாரும் அட்ச ரேகையை அடைந்தனர். அதற்குமேல் இன்னும் 226 மைல் தூரமே செல்லவேண்டி இருந்தது. ஆனல் அதனைக் கடப்பது அவர்கட்கு எளிதாகத் தோன்ற வில்லை. எவ்வளவோ முயன்றும் அதற்குமேல் செல்ல முடியாமையால், அவர்கள் மிகவும் வருத்தத்துடன் திரும்பலாயினர். வரும்போது வழி தெரியாமல் சுற்றி அலைந்து நான்கு மாதங்கள் கழித்து வார்டோ என்னும் தீவை அடைந்தனர். என்ன ஆச்சரியம்! அவர்கள் ஏறிச்சென்ற கப்பலும் சுற்றியலைந்து அன்றுதான் அத்தீவை அடைந்தது. நண்பர்கள் அனைவரும் நான்செனைக் கண்டு ஆரவாரம் செய்து வரவேற்றனர். நான்செனும் தங்கள் முயற்சி தோல்வி யடைந்ததைக் கூறி வருந்தினர். இறுதியில் எல் லோருமாகப் புறப்பட்டு மூன்ருண்டுகள் கழித்து நார்வே வந்தடைந்தனர்.

மாவீரராகிய நான்சென் தம் முயற்சியில் தோல்வி யடைந்தாரேனும் அவருடைய வீரம், அஞ்சாமை, உள்ள உறுதி ஆகியவை அனைவராலும் போற்றிப் புகழப்பட்டன. ஒவ்வொருவரும் உயர்ந்த இலட்சியத்தை அடைய நினைத்தே முயலவேண்டும். அம்முயற்சியில் தோல்வியடைந்தாலும் அது தோல்வி யாகக் கருதப்படமாட்டாது! அதற்கு உதாரணமாக விளங்கியது நான்செனின் உயரிய முயற்சி. நான் சென் தம் முயற்சியில் தோல்வியடைந்தாலும் அவர் பெற்ற அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டு மேலும் பல முன்னேற்பாடுகளுடன் சென்று **எட்வின் பியரி** என்ற மற்ருெரு பேரறிஞர் 1909-ஆம் ஆண்டில் வட துருவத்தைக் கண்டு வெற்றி பெற்ருர். நான்செனின் அனுபவமே அவருடைய வெற்றிக்குக்

காரணமா யிருந்ததாகையால் நான்சென் முயற்சியை யும் அறிஞர்கள் பாராட்டக் கடமைப்பட்டுள்ளனர்.

### அருஞ்சொல் விளக்கம்

வட்டதுருவம் - பூமியின் வடகோடி; விலங்கு - மிருகம்; வானளாவிய - வானத்தைத் தொடக்கூடிய; சிகரம் - மலையுச்சி; உறைபனி - இறுகிய பனி; தட்ப வெப்ப நிலை - சீதோஷ்ண நிலை; ஆர்டிக் பிரதேசம் - வடதுருவத்தை அடுத்துள்ள இடம். இடையூறு - துன்பம்; தூந்திரப் பிரதேசம் - பனி மிகுந்த இடம்; வெருட்டல் - அச்சமூட்டி ஓட்டுதல்; பனிப் பாறை - பனி உறைந்து பாறைபோல் இறுகிவிடுதல்; இன்னல் - துன்பம்; அட்சரேகை - பூமியின் கிழக்கு மேற்காகச் செல்வ தாகக் கருதப்படும் வட்டமான கோடு.

### வினாக்கள்

1. உலகில் மனிதரால் கண்டறியக் கூடாதனவாக விளங் கிய இயற்கை அழகு நிறைந்த இடங்கள் எவை?

2. நார்வே நாடு எங்குள்ளது? அதனுடைய இயற்கை அமைப்பைப்பற்றியும், அங்கு வாழும் மக்களைப் பற்றியும் விளக்கி எழுதுக.

3. நான்செனின் இளமைப் பண்புகள் யாவை?

4. நான்சென் வடதுருவப் பயணத்திற்காகச் செய்த ஏற்பாடுகள் யாவை?

5. 'பிராம்'—சிறு குறிப்பு வரைக.

6. நான்சென் எப்போது தம் வடதுருவப் பயணத்தைத் தொடங்கினர்? பிரயாணம் செய்யும்போது அவர் கையாண்ட முறை யாது?

7. நான்சென் கப்பல் பிரயாணம் செய்யும்போது ஏற்பட்ட இடையூறுகள் எவை?

8. பனிக்கடலில் நடந்தபோது நான்செனும் அவர் நண்பரும் அடைந்த அநுபவங்களை எழுதுக.

9. நான்செனின் அஞ்சாமையை விளக்கும் நிகழ்ச்சி யாது?

10. நான்செனின் முயற்சி வெற்றி பெருமைக்குக் காரணம் என்ன? வடதுருவ வெற்றிக்கு அவர் முயற்சி எங்ஙனம் உதவியது?

## மொழிப் பயிற்சி

1. பிரித்து எழுதுக :—வானளாவிய, பேரானந்தம், முந்நூறு, நுண்ணறிவு.

2. சேர்த்து எழுதுக :—வடக்கு + துருவம், பெருமை + ஒலி, நான்கு + புறம்.

3. சொந்த வாக்கியங்களில் பயன்படுத்தி எழுதுக :—தட்ப வெப்ப நிலை, அஞ்சா நெஞ்சம், கற்பனை, இடையூறு, இடையிடையே, பொருட்படுத்தாமல், ஆரவாரம், முன்னேற்பாடு.

4. வடதுருவ பயணத்தில் ஏற்படக் கூடிய இடையூறுகளை விளக்கி ஒரு கட்டுரை எழுதுக.

5. (1) நான்சென் என்னும் பெரியார் நார்வே நாட்டில் பிறந்தவர். (2) அவர்கள் பனிப்பாறைகளை ஸ்கீயின் உதவியால் கடந்தனர்; இடையிடையே குறுக்கிட்ட ஆறுகளைப் படகின் உதவியால் தாண்டினர்.

இவ்வாக்கியங்களைக் கவனியுங்கள். முதல் வாக்கியத்தில் நான்சென் என்னும் எழுவாய், பிறந்தவர் என்ற ஒரே பயனிலையைக் கொண்டு முடிந்தது. ஒரு எழுவாய் ஒரு பயனிலையைக் கொண்டு முடியும் வாக்கியம் தனிநிலை வாக்கியம் எனப்படும்.

இரண்டாம் வாக்கியத்தில் அவர்கள் என்ற எழுவாய் கடந்தனர், தாண்டினர் என்ற இரண்டு பயனிலைகளைக் கொண்டு முடிந்தது. ஒரு எழுவாய் பல பயனிலைகளைக் கொண்டு முடிவது தொடர்நிலை வாக்கியமாகும்.

உங்கள் பாடப் பகுதியிலிருந்து இவைகட்கு இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

### இலக்கணப் பயிற்சி

1. கந்தன் பல அரிய செய்திகளை அறிந்தான்.

2. ஆசிரியர் எங்களுக்குப் பல அரிய செய்திகளை அறிவித்தார்.

முதல் வாக்கியத்தில் அறிதல் என்னும் செயல் கந்தனைச் சாரும். இரண்டாம் வாக்கியத்தில் அறியும் செயல் மாணவரையும் அறியுமாறு செய்தல் ஆசிரியரையும் சாரும். அறிந்தான் என்னும் வினைக்குத் தன்வினை என்றும், அறிவித்தார் என்னும் வினைக்குப் பிறவினை என்றும் பெயர்.

கீழ்க்கண்ட தன்வினை பிறவினை உருவங்களை அறிக :—

கல் - கற்பி ; தா - தருவி ; காய் - காய்ச்சு ; ஓடு - ஓட்டு ; வா - வருவி, மடி - மடிப்பி ; காண் - காட்டு ; சுழல் - சுழற்று.

கீழ்க்கண்ட வினைப் பகுதிகளுக்குத் தன்வினை பிறவினை உருவங்களைத் தன்மை முன்னிலை இடங்களுக்குப் பொருத்தமாக எழுதுக :—

எழுது, பெறு, விழு, வார், காண், அடி, போ, நட.

# 9. அன்னை காவிரி

'ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்' என்பது ஔவையார் வாய்மொழி. ஓர் ஊருக்கு அழகைத் தருவது ஆறேயாகும். ஆற்றை அடுத்த ஊரில் வாழ்பவர் தண்ணீருக்குத் துன்பப்படமாட்டார்கள்; நீரில்லாத கோடைகாலத்திலும் ஆற்றில் ஊற்றுக்களை அமைத்துத் தண்ணீரைப் பெற்று இன்பமாக வாழ்வார்கள். அவ்வூரைச் சுற்றிலும் வயல்களெல்லாம் செழித்து வளர்ந்து கண்ணுக்குப் பசுமையான காட்சியை வழங்கும். அதனால் அவ்வூர் மக்கள் உணவுக்கும் துன்புறமாட்டார்கள். உயிர் வாழ்க்கைக்கு அவசியமாக வேண்டிய உணவையும் நீரையும் தருவதால் ஆற்றை நம்முன்னோர்கள் தெய்வமாகக் கருதிப் போற்றினர்கள்.

நம் தமிழ்நாட்டில் காவிரி, வையை, தாமிர வருணி, பெண்ணை, பாலாறு எனப் பல ஆறுகள் பாய்ந்து வளம் செய்கின்றன. அவைகளில் சிறந்தது காவிரி நதியேயாம். காவிரிநதி வற்ருத ஜீவநதி. மேகம் மழைபொழியாக் காலத்திலும் காவிரியில் தண்ணீர் பெருகிக்கொண்டேதான் இருக்கும். அதனுல் காவிரி நதியின் கரைகளில் அமைந்த ஊர்களில் என்றும் உழவுத் தொழில் நடைபெறும். அவ்விடங்களில் வாழும் மக்கள் உணவுக்குக் கவலைப்படமாட்டார்கள். காவிரி நதியின் நீர்ப்பெருக்கினுல் அவ்விடங்களில் வேறுபல தொழில்களும் நடைபெறுகின்றன. அதனுல் வாணிகமும் வளர்ந்துள்ளது. இக்காரணங்களாலேயே தென்னுட்டு நதிகளில் காவிரியைச் சிறந்ததாகப் போற்றுகின்றனர்.

காவிரி பலநாடுகளின் வழியாகப் பாய்ந்தாலும் சோழநாட்டிற்கே அதனால் மிகுந்த நன்மை உண்டாகின்றது. தஞ்சாவூர் மாவட்டமும் திருச்சிராப்பள்ளி மாவட்டமும் சோழநாடு என முன்பு வழங்கப்பட்டன. காவிரி நதி சோழநாட்டிற்குள் புகும்போது அதிலிருந்து பல கிளை நதிகள் பிரிகின்றன. அக்கிளை நதிகளிலிருந்து பல சிற்றாறுகளும், வாய்க்கால்களும் உடம்பில் உள்ள இரத்தக் குழாய்களைப்போல ஆயிரக் கணக்காகப் பிரிந்து செல்கின்றன. சோழநாட்டில் எங்கு நோக்கினும் ஆறுகளையும் வாய்க்கால்களையுமே நாம் காணலாம். இங்ஙனம் நீர்வளம் செறிந்து விளங்குகின்றமையால் அந்நாட்டிற்கு 'நீர் நாடு' என்றும் 'புனல் நாடு' என்றும் பெயர் வழங்குகின்றது. காவிரியின் நீர்வளத்தால் சோழ நாட்டில் உழவுத் தொழில் வளர்ந்துள்ளது.

இன்றும் தஞ்சாவூர் மாவட்டம் 'தென்னிந்தியாவின் நெற்களஞ்சியம்' என்று போற்றப்பெற்று வருகின்றது. இதற்குக் காவிரி நதியே காரணமாகுமல்லவா? சோழநாட்டின் வளத்தால் அந்நாடு மட்டுமன்றித் தமிழ்நாடு முழுவதும் பயன்பெறுகிறது. ஆதலால் காவிரியன்னை தமிழ் நாட்டவர் யாவர்க்குமே தாயாவாளன்றோ?

இங்ஙனம் தங்களைத் தாய்போல் காக்கும் காரணத்தால் தமிழ்மக்கள் காவிரியை அன்னையாகவே கருதிப் போற்றுகின்றனர்.

இனி, இத்தகைய சிறப்பு வாய்ந்த நதி எங்கு உற்பத்தியாகிறது என்று கவனிப்போம். மேற்குத் தொடர்ச்சி மலையில் குடகு நாட்டைச் சார்ந்து சையமலை என்று ஒரு குன்று உள்ளது. அம்மலையின் சிகரத்திலிருந்துதான் காவிரி நதி உற்பத்தி

யாகிறது. அங்கு இடைவிடாமல் நீர் சுரந்து கொண்டே இருக்கிறது. இவ்வாறு இடைவிடாமல் நீர் சுரப்பதால்தான் காவிரிநதியும் வற்ருத ஜீவ நதியாய் விளங்குகின்றது. இவ்விடத்தில் முப்பது அடி சதுரமான ஒருகுளம் அமைக்கப்பட்டுள்ளது. அக்குளத்தில் எப்பொழுதும் இரண்டரை அடி ஆழமே நீர் நிறைந்திருக்கும். எஞ்சிய நீரெல்லாம் அக்குளத்தின் நாற்புறமும் அமைந்த மடைகளின் வழியாய் வழிந்து சென்றுவிடும். இவ்விடத்திற்குத் **தலைக் காவிரி** என்று பெயர். அக்குளக்கரையில் காவிரி யன்னையின் கோயில் அமைந்துள்ளது. அக்கோயிலில் என்றும் அணையாத விளக்கொன்று எரிந்து கொண்டிருக்கிறது. அது காவிரியின் நீர் என்றும் வற்ருது என்பதற்கு அடையாளம் போன்றுள்ளது. இத்தலைக்காவிரி ஒரு புண்ணிய தீர்த்தமாகக் கருதப் படுகிறது. ஐப்பசி மாதத்தில் **துலாமுழுக்கு விழா** இங்குச் சிறப்பாக நடைபெறுகிறது.

இங்ஙனம் மேற்குத் தொடர்ச்சி மலையிலிருந்து பெருகிய நீர் முழுவதும் நெடுந்தூரம் சென்று பாக மண்டலம் என்ற இடத்திலிருந்து ஆருக வடிவம் கொள்கிறது. மலைப்பிரதேசமாகிய குடகு நாட்டில் காவிரி வளைந்தும் நெளிந்தும் குதித்தும் செல்வது மிக்க அழகான காட்சியாகும். குடகு நாட்டை அடுத்துக் காவிரிநதி மைசூர் நாட்டை அடைகிறது. அங்கு ஹேமாவதி, இலட்சுமண தீர்த்தம் என்ற இரண்டு சிற்ருறுகள் காவிரியுடன் கலக்கின்றன. இவ்விதம் மூன்று ஆறுகள் கலந்து கடல்போல் காட்சியளிக்கும் இடத்தில் மைசூர் அரசாங்கத்தார் ஒரு பெரிய நீர்த் தேக்கத்தை அமைத்துள்ளனர். அதற்குக் '**கிருஷ்ண ராஜ சாகரம்**' என்று பெயர். அங்கு அமைக்கப்

பட்டுள்ள பெரிய அணை **கண்ணம்பாடி அணை** என்று வழங்கப்படுகிறது. இந்த அணையினாலேயே மைசூர் நாடு மிக்க வளம்பெற்று விளங்குகின்றது. இயற்கை அழகு வாய்ந்த இவ்விடத்தில் அழகுக்கு அழகு செய்வது போலப் '**பிருந்தாவனம்**' என்ற அழகிய பூஞ்சோலை அமைந்துள்ளது. அதனைக் காண்பவர் 'பூலோக சுவர்க்கமோ இது!' என்று வியந்து தம்மையே மறந்துவிடுவர் என்றால் அதன் பெருமையைக் கூறவும் வேண்டுமோ?

பின்பு காவிரி நதி சீரங்கப்பட்டணத்தின் வழியாக வருகிறது. அங்கு அஃது இரண்டாகப்பிரிந்து எட்டு மைல் தூரம் சென்று ஒன்றாகச் சேர்கிறது. இரண்டாறுகளுக்கும் இடையில் உள்ள தீவு **சீரங்கப் பட்டணமாகும்**. அது சரித்திரப் புகழ்பெற்ற ஊர். அதன் பின்னர்ச் சிவசமுத்திரம் என்ற இடத்தில் காவிரிநதி மலையிலிருந்து அருவியாக விழுகின்றது. இதுவே உலகம் போற்றும் **சிவசமுத்திர நீர்வீழ்ச்சி**யாகும். காவிரிநதியின் போக்கிலேயே பேரழகு வாய்ந்த இடம் இதுவே. 'இதைப் போன்ற நீர் வீழ்ச்சியை உலகில் எங்குமே கண்டதில்லை,' என்று **புக்கனன்** என்ற மேனாட்டார் ஒருவர் கூறியுள்ளார் என்றால் அதன் அழகைக் கூறவும் முடியுமோ? இயற்கை அழகு வாய்ந்த இவ்விடத்தில் இந் நீர்வீழ்ச்சியின் உதவியால் மைசூர் அரசாங்கத்தார் ஏராளமான மின்சாரம் உற்பத்தி செய்கின்றனர்.

அதன் பின்னர், காவிரி நதி இரண்டு மலைச்சரிவுகளுக்கிடையில் பன்னிரண்டு அடி அகலமாக ஓடுகிறது. இங்குக் காவிரிநதியை ஓர் ஆடும் தாண்டிவிடக் கூடுமாதலால் இதற்கு '**ஆடு தாண்டுங் காவிரி**' என்று பெயர் வழங்குகிறது. இவ்விடத்



ஆடு தாண்டும் காவிரி



மேட்டூர் நீர்த்தேக்கம்

தைத் தாண்டிய பிறகு காவிரி நதி தமிழ்நாட்டில் கோயம்புத்தூர் சேலம் மாவட்டங்களுக்கிடையே பாய்ந்தோடி வருகின்றது. இங்கு ஓரிடத்தில் காவிரி நதி இரண்டு மலைகளுக்கிடையே பாய்கிறது. இரண்டு மலைகளும் காவிரிக்குக் கரைபோல் அமைந்துள்ளன. ஓரிடத்தில் அம்மலைகள் இரண்டும் ஒன்று கூடுவது போல் நெருங்கியுள்ளன. அவ்விடத்தில் குறுக்கே அணைகட்டி நீரைத் தேக்கியுள்ளார்கள். இந்நீர்த் தேக்கமே புகழ்பெற்ற **மேட்டூர் நீர்த்தேக்கமாகும்.** இந்நீர்த்தேக்கத்தாலேயே சோழநாடு பொன்விளையும் பூமியாக மாறியுள்ளது என்னலாம். தமிழ் நாட்டில் உபயோகப்படும் மின்சாரத்தில் பெரும்பகுதி இங் கேயே உற்பத்தி செய்யப்படுகிறது.

இதற்குப் பிறகு காவிரி நதி சோழநாட்டை அடைகிறது. சோழநாட்டை அடைவதற்குள் காவிரி யில் பல சிற்றாறுகள் கலக்கின்றன. அவைகளில் பவானி, அமராவதி என்பன சிறப்பாகக் குறிக்கத் தக்கனவாகும். இங்ஙனம் பல ஆறுகளின் கூட்டுற வால் காவிரி நதி மிகப் பெரிய உருவத்தை உடைய தாய் விளங்குகிறது. திரிசிராப்பள்ளிக்கு மேற்கே ஒன்பது மைல் தொலைவில் காவிரியிலிருந்து ஒரு கிளை நதி பிரிகின்றது. அதற்குக் **கொள்ளிடம்** என்று பெயர். அது காவிரியைக் காட்டிலும் உருவில் பெரியதாய் ஓடித் தென்னார்க்காடு மாவட்டத்தைச் செழிக்கச் செய்கிறது. இந்த ஆறு பிரியும் இடத்திற்கு மேற்கில் உள்ள பகுதிக்கு '**அகண்ட காவிரி**' என்று பெயர். இவ்விடத்தில் ஆறு ஒரு மைல் அகலமுள்ளது. காவிரியும் கொள்ளிடமும் பிரிந்து இடையிலே ஒரு தீவை உண்டாக்கியுள்ளன. அதுவே **சீரங்கம்** என்ற புண்ணியப் பதியாகும்.

அரங்கம் என்பது ஆற்றினிடையில் அமைந்த திட்டைக் குறிக்கும். இங்குக் காவிரியின் தென்கரையில் சோழர்களின் புகழ்பெற்ற தலைநகரமாகிய **உறையூர்** பொலிவுற்று விளங்கியது. இப்போது உறையூர் சிற்றூராக உள்ளது. அதனை அடுத்துக் காவிரிக் கரையில் திரிசிராப்பள்ளி திகழ்கிறது.

சோழநாட்டில் காவிரிக்கரையில் பல புண்ணியத் தலங்கள் உள்ளன. அவைகளில் திருவையாறு, சுவாமிமலை, கும்பகோணம் என்பன சிறப்பாகக் குறிப்பிடத்தக்கனவாம். திருவையாற்றுக்கு அருகில் சுமார் ஏழு மைல் தொலைவிற்குள் காவிரியும் கொள்ளிடம், குடமுருட்டி, வெண்ணாறு, வெட்டாறு என்ற அதன் கிளை நதிகளும் பாய்ந்து வளம் செய்கின்றமையால் அவ்வூர் அப்பெயர்பெற்றது. பின்னர்க் காவிரி நதி மாயூரத்தை அடைகிறது. இங்குக் காவிரி தன் வளத்தையெல்லாம் சோழநாட்டு மக்களுக்கு வாரி வழங்கிவிட்டு மெலிந்த உருவத்துடன் ஓடுகிறது. தரங்கம்பாடி என்ற ஊருக்கு அருகில் காவிரி நதி ஒரு வாய்க்கால் போல் சென்று கடலுடன் கலக்கின்றது. இங்குத்தான் பழையகாலத்தில் புகழ்பெற்ற **காவிரிப் பூம்பட்டினம்** என்ற தலைநகரம் விளங்கியது.

இங்ஙனமாகக் காவிரிநதி குடகு மலையில் தோன்றி ஏறக்குறைய 450 மைல் தூரம் பல நாடுகளின் வழியே சென்று கீழ்க்கடலில் கலக்கின்றது. அந்நதி தான் பாய்ந்து செல்லும் இடங்களை எல்லாம் செழிக்கச் செய்து பொன்விளையும் நாடுகளாகச் செய்துள்ளது. தமிழ்நாட்டின் செல்வச் சிறப்பிற்குக் காவிரிநதி மிகவும் உதவி செய்வதால் தமிழ் மக்கள் காவிரிநதியைப் ‘பொன்னி’ என்று செல்வமாகப் பெயரிட்டுப் போற்றுகின்றனர். பொன்னியைத்

தக்கவாறு போற்றிப் பயன்பெறுதல் தமிழ்மக்கள் கடமையாகும்.

### அருஞ்சொல் விளக்கம்

பாழ் - வீண் ; வாணிகம் - வியாபாரம் ; மாவட்டம் - ஜில்லா; கமுகு - பாக்குமரம் ; தார் - மாலை ; சையமலை - ஸஹ்யபர்வதம் ; சிகரம் - மலையுச்சி ; சுரந்து - பெருகி ; எஞ்சிய - மீதியான ; மடை - நீர் செல்லும் சிறுவழி ; துலா முழுக்கு - ஐப்பசி மாதத்தில் காவிரியில் நீராடுதல் ; வடிவம் - உருவம் ; சாகரம் - கடல் ; திட்டு - மண்மேடு ; கூட்டுறவு - சேர்க்கை ; பதி - ஊர் ; பொலிவுற்று - அழகுடன் ; புண்ணியத்தலம் - புண்ணிய க்ஷேத்திரம் ; அருகு - பக்கம் ; கீழ்க்கடல் - கிழக்கு சமுத்திரம்.

### வினாக்கள்

1. ஆற்றை நம் முன்னோர்கள் ஏன் தெய்வமாகப் போற்றினர் ?

2. தமிழ்நாட்டில் உள்ள சில ஆறுகளின் பெயர்களைக் குறிக்க.

3. சோழநாட்டின் நீர்வள நிலவளங்கள் எத்தகையன ?

4. காவிரி எங்கு உற்பத்தியாகிறது ?

5. தலைக்காவிரி, துலாமுழுக்கு விழா, திருவையாறு - சிறு குறிப்பு வரைக.

6. மைசூர் நாட்டில் உள்ள அணைக்கட்டும் பூஞ்சோலையும் யாவை ?

7. புக்கனன் கூறியது யாது ?

8. ஆடு தாண்டும் காவிரி என்று அஃது ஏன் பெயர் பெற்றது ?

9. சிவசமுத்திர நீர்வீழ்ச்சியாலும் மேட்டூர் அணையாலும் நாம் பெற்ற நன்மைகள் யாவை ?

10. காவிரியுடன் கலக்கும் சிற்றாறுகளும், காவிரியிலிருந்து பிரியும் கிளையாறுகளும் எவை ?

11. சீரங்கம், காவிரிப்பூம்பட்டினம் இவை எங்கு அமைந்துள்ளன ?

12. காவிரிக்குப் பொன்னி என்ற பெயர் எவ்வாறு பொருந்தும் ?

## மொழிப் பயிற்சி

I. சேர்த்து எழுதுக :—தெற்கு + நாடு, சிறுமை + ஆறு, நெல் + களஞ்சியம், பூ + சோலை, மேற்கு + நாடு, மலை + சரிவு, புண்ணியம் + பதி.

II. பிரித் தெழுதுக :—நீரில்லாத, செந்நெல், பாடியுள்ளார், சோறுடைத்து, மண்ணுவது, இரண்டாறுகள், ஓரிடம், சிற்றூர்.

III. சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக :—ஜீவநதி, ஆயிரக்கணக்கான, பச்சைப் பசேலென, பூலோக சுவர்க்கம், சரித்திரப் புகழ்பெற்ற, தொலைவில், பொலிவுற்று.

IV. அவ்வூர், அவ்விடம், இவ்வாறு, இந்நதி—இச் சொற்களில் உள்ள சுட்டெழுத்துக்களைப் பிரித் தெழுதுக.

V. கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்கள் அமைக்கவும் :—

1. தஞ்சாவூர் மாவட்டம் தமிழ் நாட்டின் ——— என்று போற்றப் பெற்று வருகிறது.
2. காவிரியின் குறுக்கே மைசூர் நாட்டில் உள்ள நீர்த் தேக்கத்திற்கு ——— என்று பெயர் வழங்குகிறது.
3. காவிரி ஆற்றின் கிளை நதிகளில் சிறந்தவை ———, ———, ——— என்பனவாம்.
4. ——— அருகில் காவிரி கடலொடு கலக்கிறது.

VI. ‘காவிரியின் சிறப்புக்கள்’ என்பது பற்றிப் பத்து வரிகளில் எழுதுக.

## இலக்கணப் பயிற்சி

1. நம் முன்னோர் காவிரியைத் தெய்வமாகப் **போற்றினர்.**
2. காவிரி குடகு மலையில் **தோன்றுகிறது.**

இவ்வாக்கியங்களில் போற்றினர், தோன்றுகிறது என்னும் வினைமுற்றுக்களைக் கவனியுங்கள். போற்றினர் என்னும் சொல்லைப் போற்று + இன் + அர் எனவும், தோன்றுகிறது என்னும் சொல்லை தோன்று + கிறு + து என்றும் பல உறுப்புக்களாகப் பிரிக்கலாம். இவ்வுறுப்புக்களில் முதலில் உள்ளது பகுதி, இறுதியில் உள்ளது விகுதி. இடையில் உள்ள உறுப்பு இடைநிலை ஆகும். இவ்

வினை முற்றுக்களில் உள்ள அர், து எனும் விகுதிகள் வினைமுற்றின் திணை, பால், எண், இடங்களைக் காட்டும். இவ்வாறே மூவிடங்களிலும் வரும் வினைமுற்று விகுதிகள் கீழே தரப்பட்டுள்ளன. அவற்றை நன்கு கற்றறிக.

1. (நான்) கண்டனென், கண்டேன், கண்டனன்—தன்மை ஒருமை வினைமுற்று: விகுதிகள்—என், ஏன், அன்.

2. (நாம், நாங்கள்) சென்றனெம், சென்றேம், சென்றோம்—தன்மைப் பன்மை வினைமுற்று: விகுதிகள்—எம், ஏம், ஓம்.

3. (நீ) பெற்றனை, பெற்றாய், பெறுதி—முன்னிலை ஒருமை வினைமுற்று: விகுதிகள்—ஐ, ஆய், இ.

4. (நீர், நீங்கள்) அடைந்தனிர், அடைந்தீர், அடைமின், அடையும், அடையுங்கள்—முன்னிலைப் பன்மை வினைமுற்று: விகுதிகள்—இர், ஈர், மின், உம், உம்கள்.

5. (அவன்) சென்றனன், சென்றான்—ஆண்பால் வினைமுற்று: விகுதிகள்—அன், ஆன்.

6. (அவள்) நீராடினள், நீராடினாள்—பெண்பால் வினைமுற்று: விகுதிகள்—அள், ஆள்.

7. (அவர்) போற்றினர், போற்றினார்—பலர்பால் வினைமுற்று: விகுதிகள்—அர், ஆர்.

8. (அது) பாய்கிறது—ஒன்றன்பால் வினைமுற்று: விகுதி—து.

9. (அவை) உள்ளன—பலவின்பால் வினைமுற்று: விகுதி—அ.

# 10. தருமி பொற்கிழி பெற்றமை

[நாடகம்]

## காட்சி—1

**இடம் :** மதுரைச் சொக்கநாதர் கோயில்

**காலம் :** இரவு

**உறுப்பினர் :** தருமி

[தருமி சுவாமி சந்நிதியில் துதித்துப் பாடிக் கொண்டிருக்கிருர்.]

**தருமி :** (பாடி முடிந்ததும்) கருணைக் கடலே! பக்தர்க்கு இரங்கும் பரமனே! ஏழைமீது கருணை காட்ட மாட்டீரோ! நான் இத்தனை ஆண்டுகளாக உம்மை அருச்சித்துத் துதித்து வந்தும் தாங்கள் என்பால் இரங்கவில்லையே! எத்தனை நாட்கள் நான் வறுமையால் வாடுவேன். முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்படுவது போல் ஏழையாகிய நான் திருமணம் புரிந்துகொள்ள ஆவல் கொண்டுள்ளேன். இவ்வெண்ணத்தை என் மனத்தில் தோற்றுவித்ததும் தாமேயன்ரே! திருமணம் என்ருல் மிக்க பொன் வேண்டுமே! எனக்கு யாதேனும் ஒரு வழி காட்டமாட்டீரோ! ஏழையாகிய என் பொருட்டு மனமிரங்குதல் உமக்குப் பெரிதோ! ஐயனே! உம்மையே நம்பியுள்ள என்னைக் காப்பது உம் கடமை. நீர் கடைக்கண் பாராவிடில் நான் என் செய்வேன்!

**அசரீரி :** அன்பனே! கவலைப் படாதே. இதோ வாயிற்படியிலுள்ள ஓலைச் சுருளில் ஒரு தமிழ்ப் பாட்டு உளது. அதனைப் பாண்டியனிடம் கொடு. சிறந்த பாடல் இயற்றித் தருபவர்க்கு ஒரு பொன்

முடிப்புத் தருவதாகப் பாண்டியன் கூறியுள்ளான். அதனைப் பெற்று உன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்.

**தருமி :** எம்பெருமானே! நான் செய்த தவம் இன்றே பலித்தது. என்னை வாழவைத்த வள்ளலே! எல்லாம் உம் அருள்.

(ஓலைச்சுருளைத் தலையில் வைத்துக்கொண்டு கூத்தாடுகிறார்)

அம்பலவாணன் அருள் பொழிந்தான்!

(குதித்துக்கொண்டே பாடுதல்)

அம்பலத்தரசே அருமருந்தே
ஆனந்தத்தேனே அருள்விருந்தே!
பொதுநடத்தரசே புண்ணியனே!
புலவரெலாம்புகழ் கண்ணியனே!
சிவசிவசிவசிவ சின்மய தேசா!
சிவசுந்தரகுஞ்சித நடராசா!

## காட்சி—2

**இடம் :** பாண்டிய மன்னனின் அவைக்களம்

**காலம் :** பிற்பகல்

**உறுப்பினர் :** பாண்டியன் வங்கிய சூளாமணி, மந்திரி, பிரதானிகள், புலவர்கள்

**பாண்டியன் :** சங்கப் புலவர்களே! என் ஐயத்தைப் போக்கும் பாடலை எவரேனும் இயற்றினீரோ? மிகச் சிறந்த பாடலுக்குப் பரிசாக அமைத்த இப் பொற்கிழியும் வறிதே கிடக்கிறதே!

(காவலன் வந்து வணங்கி)

**காவலன் :** தென்னவனே! வாழ்க! யாரோ ஒரு புலவர் தங்களைக் காண வந்திருக்கிறார்.

[புலவரை அழைத்து வருமாறு அரசன் குறிப்பிடுகிறான்]

**மந்திரி :** காவல! புலவர் எவர் வந்தாலும் யாதொரு தடையுமின்றி உள்ளே வரவிடவேண்டு மென்பது மன்னனது ஆணை என்பதை மறந்தனையோ! உடனே அழைத்து வா!

(காவலன் சென்று தருமியை அழைத்து வருகிறுன்)

**தருமி :** (வணங்கி) தண்டமிழ் வளர்க்கும் பாண்டியர் கோமானே! வணக்கம்.

**பாண் :** புலவர் பெருமானே! உங்கள் வரவு நல்வரவாகுக. தாங்கள் யார்? வந்த காரியம் யாதோ?

**தருமி :** வேந்தே! என் பெயர் தருமி. நான் சோமசுந்தரரை வழிபட்டுவரும் ஏழை அந்தணன். தாங்கள் சிறந்த பாடல் பாடிக்கொண்டு வருபவர்களுக்குப் பொற்கிழி அளிப்பதாகக் கூறியுள்ளீரன்றே! நானும் ஒரு பாடல் கொணர்ந்துள்ளேன். ஏற்றருளல் வேண்டும்.

**பாண் :** புலவரே! எம் மனக்கருத்தை விளக்குமோ அப்பாடல்? அதனைப் படித்துக் காட்டும் பார்ப்போம்.

(தருமி ஓலைச்சுருளைப் பிரித்துப் பாடலைப் படித்தல்)

**பாண் :** சங்கம் வளர்க்கும் செந்தமிழ்ப் புலவீர்! கேட்டீர்களோ இப்பாடலை? எம் மனத்தில் தோன்றிய ஐயத்திற்கு இப்பாடலே ஏற்ற விடையளிக்கிறது. யாம் ஒரு சமயம் தேவியுடன் நந்தவனத்தில் உலவிக் கொண்டிருந்தோம். அப்போது திடீரென்று இதுவரை யாம் அறிந்திராத புதிய மணம் வீசியது. அவ்வாறு வாசனை வீசக் காரணம் யாதாக இருக்குமென்று யோசித்தேன். கற்பரசியாம் கோப்பெருந் தேவியின் கூந்தலின் மணமே அஃது என்று துணிந்தேன். இப்பாடல் என் உள்ளக் கருத்தையே உறுதிப் படுத்துவ

தாகக் கருதுகிறேன். மாங்குடி மருதனாரே! தங்கள் கருத்து யாதோ ?.

**மாங் :** யானும் அங்ஙனமே கருதுகிறேன். வேந்தே! இச்செய்யுள் சொல்லழகும் பொருளழகும் வாய்ந்து மிக அழகாக அமைந்துள்ளது.

**பாண் :** ஆம்! இப்பாட்டைக் கேட்டது முதல் என் உள்ளம் மகிழ்ச்சியால் பொங்குகிறது. இதன் உட்கருத்தை விளக்குவீரோ ?

**மாங் :** வண்டு பல மலர்களில் சென்று தேனுண்டு மகிழும். அதனால் எல்லா மலர்களின் வாசனையையும் அஃது அறிந்திருக்கும். அவ்வண்டை நோக்கி, 'வண்டே நீ அறிந்த பூக்களில் இப்பெண்ணின் கூந்தலிலிருந்து வரும் மணத்தைப் போன்ற வாசனையை அறிந்ததுண்டோ!' என்று கேட்பதன் மூலம் பெண்ணின் கூந்தலிலிருந்து உண்டாகும் இயற்கை மணமே சிறந்தது என்பதை இப்பாட்டு எடுத்துக் கூறுகிறது.

**பாண் :** மிகவும் அழகாய் இருக்கிறது. இப்புலவர் போற்றத் தக்கவரே! (தருமியை நோக்கி) புலவர் பெருமானே! மெச்சினேன் உம் திறத்தை!

(நக்கீரர் வருகிறார்.)

**மருதனார் :** இதோ எம் தலைவர் நக்கீரர் பெருமானும் வருகிறார். அவரும் இச்செய்யுளைப் பாராட்டுவார் என்றே கருதுகிறேன்.

**நக்கீரர் :** வாழி! பெரும!

**பாண் :** புலவரேறே! தக்க சமயத்தில் வந்தீர்! இப்புலவர் இச்சிறந்த பாடலை எழுதி வந்திருக்கிறார்.

இதனை நம் புலவர் பலரும் பாராட்டுகின்றனர். இச் சிறந்த பாடல் பரிசிற்குரியதன்றோ! பாரும்.

(ஓலையைக் கொடுக்க நக்கீரர் வாங்கிப் பன்முறை படித்துப் பார்க்கிறார்.)

**நக் :** வேந்தே! இப்பாடலில் சொற்சுவை சிறப் பாக அமைந்துள்ளது. ஆயினும்...

**பாண் :** ஆயினும் என்ன? இப்பாடலைப் பற்றி நும் கருத்து யாது?

**நக் :** இப்பாடலில் பொருட்குற்றம் உள்ளது. பெண்களின் கூந்தலுக்கு இயற்கை மணம் உளது என்ற கருத்து இதில் அமைந்துள்ளது. கூந்தலுக்கு இயற்கை மணம் ஏது? பெரிதும் விந்தையாக இருக் கிறதே! (புலவர்களை நோக்கி) அன்பர்களே! பொரு ளைக் கூர்ந்து நோக்காது இதனை எங்ஙனம் பாராட்டி னீர்கள்?

**கபிலர் :** இப்பாடலில் ஏதோ ஒருவகைச் சிறப்பு காணப்படுகின்றது. குற்றத்தை நாங்கள் உணர வில்லை.

**நக் :** சொல்லும். பொருளும் சிறப்புடைய பாட்டுக்கன்றோ பொற்கிழி அளிப்பதாக முடிவு செய் தோம். இஃது எவ்வகையிலும் பரிசுக்கு உரியதாகாது.

**பாண் :** (தருமியை நோக்கி) புலவரே! எமது தமிழ்ச் சங்கத்தின் தலைவர் நக்கீரர் உமது பாட்டில் குற்றமிருப்பதாகக் கூறுகிறார். ஆதலால் பரிசு உமக்கு உரியதன்று.

## காட்சி—3

**இடம் :** சொக்கநாதரின் கோயில்

**காலம் :** இரவு

(தருமி இறைவன் முன் பணிந்து நிற்கிறார்.)

**தருமி :** ஐயனே ! நான் முற்பிறவியில் செய்த வினை இன்னும் தொடர்ந்து வருத்துகிறதே! என் செய்வேன்! கைக்கெட்டியது வாய்க் கெட்டாமற் போயிற்றே! இலவு காத்த கிள்ளையானேனே! பரிசு வழங்கவந்த பாண்டியனை நக்கீரர் தடுத்து விட்டாரே! ஈசனே ! உம்முடைய பாட்டிலும் குற்றம் உளது என் கின்றனர்! இஃது என்ன அநியாயம்? என்மீது எத்தனை குற்றங்களைச் சுமத்தினாலும் பொறுப்பேன். செய்யுளை எனக்கு அருளிய தம்மையன்றோ இக்குற்றம் சார்கிறது! இதனை நான் எங்ஙனம் ஆற்றுவேன்! உண்மையை வெளிப்படுத்தி நக்கீரரின் கருவத்தை அடக்கி யருளவேண்டும். உபாயத்தைக் காட்டிய தாங்களே இவ்வபாயத்தினின்றும் என்னைக் காத் தருளல் வேண்டும்.

மறலியையும் கொன்று தேவரீர் மார்க்கண்டனைக் காக்கவில்லையோ! கண்ணப்பனைக் காத்த நும் கரு ணையை என்னென்பேன்! உம்மையே நம்பியுள்ள என்னை ஆதரிக்க வேண்டுகின்றேன்.

**அசரீரி :** அன்பனே! வருந்தாதே! நாளைக் காலை நாம் சங்க மண்டபம் சென்று நக்கீரருடன் வாதிட்டு வெல்வோம்; நீயும் அவ்விடத்துக்கு வந்து சேர்வாய்.

## காட்சி—4

**இடம் :** சங்க மண்டபம்

**காலம் :** முற்பகல்

**உறுப்பினர் :** பாண்டியன், நக்கீரர், மாங்குடி மருதனுர், கபிலர், தருமி, புலவர்கள்.

(இறையனுர் அவையுட் புகுதல்)

**இறையனுர் :** (கோபத்துடன்) வேந்தே வாழி! நேற்று என் பாடலில் குற்றம் கண்டவர் யார் ?

**பாண்டியன் :** புலவர் பெருமானே! ஏன் இத்தனை கோபம்? தாங்கள் யார்? எந்த ஊர் ?

**இறை :** என்னை இறையன் என்பர் ? எனக்குச் சொந்தமான ஊரொன்றில்லை. நான் எங்குமிருப் பேன். புலவர்களாகிய எங்களுக்கு யாதும் ஊரே ! யாவரும் சுற்றத்தாரே யன்றே !

**பாண் :** தாங்கள் வந்த காரியம் யாதென விளக்க வேண்டுகிறேன்.

**இறை :** வறுமையால் வாடிய இத்தருமியின் பொருட்டு நான் நேற்று ஒரு பாடலை இயற்றித் தந்தேன். இதில் குற்றமுள்ளதாக யாரோ கூறினுராம். யார் அவர் ?

(நக்கீரர் முன் வருகிருர்.)

**நக்கீரர் :** நான் தான் !

**இறை :** அதில் நீர் என்ன குற்றம் கண்டீர் !

**நக் :** பாடல் சொல்லழகுடன் விளங்குகிறது; ஆனுல் பொருள் பொருத்தமுற அமையவில்லை.

**இறை:** உமக்குப் பொருத்தமற்றதாகத் தோற் றும் பொருள் யாது ?

நக் : பெண்களின் கூந்தலுக்கு மலர்களால் செயற்கை மணம் உண்டேயன்றி இயற்கை மணம் இல்லை. உமது பாடலில் இயற்கை மணம் உண்டென்று நீர் கூறியுள்ளது குற்றமே.



இறை : கற்புடைய மகளிரின் கூந்தலில் இயற்கை மணம் உண்டென்பதை நீர் அறியீரோ ?

நக் : அவர் கூந்தல் மணமும் செயற்கையாலானதே !

இறை : தேவமாதரின் கூந்தலில் ?

நக் : கற்பகம், மந்தாரம், பாரிஜாதம் முதலிய தேவ மலர்களாலேயே அவர்கள் கூந்தலுக்கும் மணம் உண்டாகிறது.

இறை : நீர் நாள்தோறும் வழிபடும் உமாதேவியாரின் கூந்தல் மணமோ ?

நக் : அதுவும் செயற்கை மணந்தான்.

**இறை :** (சினத்துடன் நெற்றிக் கண்ணையும் அவிர் சடையையும் காட்டி) என்ன சொன்னீர் !

**நக் :** நெற்றிக் கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே. உம் உடல் முழுதும் கண்ணுயினும் யான் அஞ்சேன். சடைகொண்டு என்னை வெருட்டல் வேண்டா.

**இறை :** உலகை யெல்லாம் பெற்ற தாயாகிய உமாதேவியாரின் கூந்தலை நீர் பழித்தீர். என்னே உம் செருக்கு ! வெப்பு நோயால் நீர் வருந்தக் கடவீர் !

(நக்கீரர் வெப்பம் தாங்காது பொற்றாமரைக் குளத்தில் சென்று விழுகிறார். இறையனார் மறைகிறார்.)

**புலவர்கள் :** ஆகா ! என்ன ஆச்சரியம் ! புலவர் பெருமான் மறைந்தனரே !

**மாங்குடி மருதனார் :** இதுவும் சொக்கநாதரின் திருவிளையாடலே ! இறையனாராக வந்தவர் இறைவனே. நாம் அவரை வாழ்த்தி வணங்குவோம்.

(புலவர் துதிக்கின்றனர் ; நக்கீரர் கரையேறி வந்து கடவுளை வணங்குகிறார்.)

**நக் :** எம்பெருமானே ! உண்மை உணர்ந்தேன். யான்புரிந்த குற்றத்தை மன்னித்தருளல் வேண்டும்.

**அசரீரி :** நக்கீர ! உன் அஞ்சாமையை மெச்சினோம் ! உன்னை மன்னித்தோம். ‘சென்று நீ கயிலை காணில் தீருமிக் கொடுநோய்.’

**நக் :** ஈசா ! என்னே உன் அருள் ! (புலவர்களை நோக்கி) அன்பர்களே ! நான் கயிலை சென்று வருகிறேன். இத்தனை ஆண்டுகளாக இன்பமாக வாழ்ந்த இம்மதுரை மாநகரை என்று காண்பேன் ! சுந்தரேசப்

பெருமானையும் அங்கயற் கண்ணியையும் என்று தரிசிப்பேன்! இத்தமிழ்ச் சங்கத்தையும் பாண்டிய மன்னனையும் என்று மீண்டும் காண்பேனே! புலவர் பெருமக்களே! என்னை மறவாதீர்கள். நான் போய் வருகிறேன். (நக்கீரர் மிக்க துயரத்துடன் புலவரை விட்டுப் பிரிகிறார். புலவரும் அரசனும் வருந்துகின்றனர்.)

### அருஞ்சொல் விளக்கம்

அருச்சித்தல் - மலரிட்டு வழிபடுதல்; கொம்புத்தேன் - கிளையின் உச்சியில் உள்ள தேன்; கடைக்கண் பார்த்தல் - அருள் செய்தல்; அருமருந்து - சிறந்த அமிழ்தம்; பொது - ஞான சபை; நடம் - நடனம்; கண்ணியன் - பெருமை பொருந்தியவன்; சின்மயம் - அறிவு வடிவம்; தேசா - ஒளி உடையவனே; குஞ்சித-தூக்கிய வளைந்த திருவடியை உடைய; வறிதே - வீணாக; தென்னவன் - பாண்டியன்; ஆணை - கட்டளை; கோமான் - தலைவன்; பொற்கிழி - பொன் முடிப்பு; புலவர் ஏறு - புலவர்களுள் ஆண் சிங்கம் போன்றவர்; விந்தை - வியப்பு; கூர்ந்து - நுட்பமாக; இலவு - இலவ மரம்; கிள்ளை - கிளி; மறலி - இயமன்; அவிர் - விளங்குகின்ற; வெருட்டல் - அச்சுறுத்தல்; அங்கயற் கண்ணி - மீனாட்சி.

### வினாக்கள்

1. தருமி இறைவனிடம் வேண்டியது யாது?
2. இறைவன் தருமிக்கு எவ்வாறு உதவி செய்தார்?
3. பாண்டிய மன்னன் கொண்டிருந்த ஐயம் யாது? அதனைத் தருமியின் பாடல் எவ்வாறு போக்கியது?
4. இறையனார் பாடிய பாட்டின் கருத்து யாது?
5. நக்கீரர் இறைவன் பாட்டில் கண்ட குற்றம் என்ன?
6. பரிசு கிடைக்காத தருமி இறைவனிடம் என்ன முறையிட்டார்?
7. நக்கீரருக்கும் இறையனாருக்கும் நடந்த வாதத்தை விளக்கி எழுதுக.
8. இறையனார் நக்கீரரை எங்ஙனம் சபித்தனர்? அதற்குக் காரணம் என்ன?
9. 'சென்று நீ கயிலை காணில் தீருமிக் கொடு நோய்'— சந்தர்ப்பம் கூறுக.
10. நக்கீரர் கயிலை செல்லும்போது வருந்திக் கூறிய உரைகள் எவை?

## மொழிப் பயிற்சி

1. வாக்கியங்களில் பயன்படுத்துக: முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப்பட்டது போல, பொற்கிழி, சொற்சுவை பொருட்சுவை, கைக்கெட்டியது வாய்க்கெட்டாதது போல, இலவு காத்த கிளிபோல.

2. பிரித்துக் காட்டுக: பொற்கிழி, சொற்சுவை, பொருட் சுவை, தண்டமிழ், முற்பிறவி, அங்கயற்கண்ணி.

3. சேர்த்தெழுதுக: பொன் + தாமரை, கற்பு + அரசி, பொருள் + குற்றம், செம்மை + தமிழ்.

4. எதிர்ப்பதம் கூறுக:—வறுமை, மறதி, ஐயம், அநி யாயம், செயற்கை, பழித்தல்.

5. கீழே தரப்பட்டுள்ள வாக்கியங்களை அடைப்புக் குறி களில் கூறியுள்ளவாறு மாற்றுக:

1. புலவர் பலரும் இச்செய்யுளைப் பாராட்டுகின்றனர். (உணர்ச்சி வாக்கியமாக்குக)
2. கூந்தலுக்கு இயற்கை மணம் ஏது? (செய்தி வாக்கிய மாக்குக)
3. இச்செய்யுள் எவ்வகையிலும் பரிசுக்குரியதாகாது. (வினவாக்கியமாக்குக)
4. ஐயோ கைக்கெட்டியது வாய்க்கெட்டாமல் போயிற்றே! (செய்தி வாக்கியமாக்குக)
5. நீ இப்பாட்டைப் பாண்டியனிடம் கொடு. (வினா வாக்கியமாக்குக)

6. கோடிட்ட இடங்களில் ஏற்ற பெயரெச்ச வினையெச்சங் களை அமைக்க:

1. தருமி இறைவனிடம் தன் குறையை———முறை யிட்டான்.
2. பாண்டியன் தன் மனத்தில்———ஐயத்தைத் தீர்க்கு மாறு வேண்டினன்.
3. நான் நாளை———செயலை அனைவரும் பாராட்டுவர்.
4. உன் கையில்———புத்தகத்தை என்னிடம் கொடு.
5. அவன் ஆற்றை———சென்றான்.

7. இந்த் நாடகத்தை மாணவர்கள் சிலர் சேர்ந்து நடித்துப் பழகுக.

# செய்யுட் பகுதி

## I. கடவுள் வணக்கம்

### சிவபெருமான்

இன்பம் பெருக்கி இருளகற்றி எஞ்ஞான்றும்
துன்பம் தொடர்வறுத்துச் சோதியாய்—அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து. (1)

—மாணிக்கவாசகர்

### திருமால்

என்றும் திருமாற்கே யாளாவேன் ; எம்பெருமான்
என்றும் எனக்கே பிராணுவான் ;—என்றும்
பிறவாத பேராளன் பேரா யிரமும்
மறவாது வாழ்த்துகவென் வாய். (2)

—பழம்பாடல்

### கலைமகள்

நாடிப் புலங்கள் உழுவார் கரமும் நயஉரைகள்
தேடிக் கொழிக்கும் கவிவாணர் நாவும் செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும் உவந்து நடம்
ஆடிக் களிக்கும் மயிலே உன்பாதம் அடைக்கலமே(3)

—கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை

### சுதந்திரதேவி

இதந்தரு மனையில்நீங்கி
இடர்மிகு சிறைப்பட் டாலும்
பதந்திரு இரண்டும் மாறிப்
பழிமிகுந் திழிவுற் றாலும்

விதந்தரு கோடி யின்னல்
விளைந்தெனை யழித்திட் டாலும்
சுதந்திர தேவி! நின்னைத்
தொழுதிடல் மறக்கி லேனே. (4)

—பாரதியார்

## ஆசிரியர் குறிப்புக்கள்

**மாணிக்கவாசகர்:** இவர் சைவ சமயாசாரியர்களில் ஒருவர்; அரிமர்த்தன பாண்டிய மன்னனுடைய அமைச்சராக இருந்தவர். இவர் இயற்றிய நூல் - 'திருவாசகம்' எனப்படும். 'திருவாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்பது பழமொழி. இவர் காலம் கி. பி. எட்டாம் நூற்றாண்டாம்.

**கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை:** இவர் தற்காலப் புலவர்களில் சிறந்தவர். இவர் பாடல்கள் மிகவும் எளிய இனிய நடையில் சிறுவர்களுக்கும் விளங்குமாறு அமைந்துள்ளன. புத்தேரி என்னும் ஊரில் தற்போது ஒய்வு பெற்றுள்ளார். 'மலரும் மாலையும்' என்னும் நூலில் இவர்தம் பாடல்கள் தொகுத்து வெளியிடப்பட்டுள்ளன.

**பாரதியார்:** தேசீய கவி சுப்பிரமணிய பாரதியார் தமிழ் மக்களிடையே சுதந்திர உணர்ச்சியை ஊட்டினர். இவர் நாட்டுப்பற்று, மொழிப்பற்று, ஒற்றுமை உணர்ச்சி ஆகியவற்றைப் பற்றி நூற்றுக் கணக்கான பாடல்கள் இயற்றியுள்ளார். இப்பாடல்கள் பாரதியார் பாடல்கள் என்ற தலைப்பில் வெளியிடப்பட்டுள்ளன. காலம்: 1882 முதல் 1921 வரை.

## அருஞ்சொல் விளக்கம்

1. எஞ்ஞான்றும் - எப்பொழுதும்; தொடர்வு - சம்பந்தம்; சோதியாய் - ஒளிமயமாய்; சீர் - சிறப்பு; ஆர் - பொருந்திய; பெருந்துறை - திருப்பெருந்துறை என்னும் தலம்; உவந்து - மகிழ்ந்து.

2. திருமால் - மகாவிஷ்ணு; ஆள் - ஆட்பட்டவன், அடிமை; பிரான் - தலைவன்.

3. புலம் - வயல்; கரம் - கை; நயஉரை - இனிய சொல்; கொழிக்கும் - பொழியும், (பேசும்); கவிவாணர் - புலவர்; நா - நாக்கு; செழும்கருணை - மிக்க இரக்கம்; மயில் - மயில் போன்ற கலைமகள்; அடைக்கலம் - சரணம்.

4. இதம் - இன்பம்; மனை - வீடு; இடர் - துன்பம்; பதம் - பதவி; திரு - செல்வம்; உற்றாலும் - அடைந்தாலும்; இன்னல் - துன்பம்; மறக்கிலேன் - மறக்கமாட்டேன்; ஏ - அசை.

## வினாக்கள்

1. பெருந்துறையான் மாணிக்க வாசகருக்குப் புரிந்த நன்மைகள் யாவை?

2. பழம் பாடலில் கூறப்படும் திருமாலின் பெருமைகளைக் கூறுக.

3. கலைமகள் எவ்விடங்களில் நடம் புரிவதாக ஆசிரியர் கூறுகிறார்? இதனால் நாமறிவதென்ன?

4. எவ்வமயங்களில் சுதந்திர தேவியை மறவாதிருப்பதாகப் பாரதியார் கூறுகிறார்?

## பயிற்சி

1. பிரித்தெழுதுதல்:

| | | |
|---|---|---|
| தொடர்வறுத்து | — | தொடர்வு + அறுத்து |
| திருமாற்கே | — | திருமால் + கு + ஏ |
| வாழ்த்துகவென் | — | வாழ்த்துக + என் |
| செழுங்கருணை | — | செழுமை + கருணை |
| மிகுந்திழிவுற்றாலும் | — | மிகுந்து + இழிவு + உற்றாலும் |

2. பிரித்தெழுதுக: இருளகற்றி, பிரானவான், பேராயிரம், கோடியின்னல்.

3. உரைநடைப் படுத்திக் கூறுக: ஊராகக் கொண்டான் உவந்து, மறவாது வாழ்த்துக என்வாய்.

4. கடவுள் வாழ்த்துப் பாடல்களின் ஆசிரியர்களில் தற்காலத்தில் வாழ்பவர் யார்?

5. முதல் இரண்டு பாடல்களின் எழுவாய் பயனிலை செயப்படுபொருளைக் கூறுக.

## II. தமிழ்த்தாய்

வானார்ந்த பொதியின்மிசை வளர்கின்ற மதியே!
மன்னியமூ வேந்தர்கள்தம் மடிவளர்ந்த மகளே!
தேனார்ந்த தீஞ்சுனைசால் திருமாலின் குன்றம்
தென்குமரி யாயிடைநற் செங்கோல்கொள் செல்வி
கானார்ந்த தேனே!கற் கண்டே! நற் கனியே!
கண்ணே! கண் மணியே!அக் கட்புலஞ்சேர் தேவி
ஆனாத நூற்கடலை அளித்தருளும் அமிழ்தே!
அம்மே! நின் சீர்முழுதும் அறைதல்யார்க் கெளிதே!

—கரந்தைக் கவியரசு அரங்க. வேங்கடாசலம் பிள்ளை

### ஆசிரியர் குறிப்பு

வேங்கடாசலம் பிள்ளை: இவர் மோகனூரில் பிறந்தவர்; இக்காலத்தில் சிறந்து விளங்கும் புலவர்களில் ஒருவர். திருவையாற்று அரசர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து இப்போது ஓய்வு பெற்றுத் தஞ்சையில் வாழ்ந்து வருகிறார். பல செய்யுள் நூல்களும் உரை நூல்களும் இவர் எழுதியிருக்கிறார். இவர் பாடல்கள் மிகவும் இனிமையானவை.

### அருஞ்சொல் விளக்கம்

வான் - ஆகாயம்; ஆர்ந்த - பொருந்திய; பொதியின்மிசை - பொதிய மலையில்; மதி - சந்திரன் போல் குளிர்ச்சியுடையவள்; மன்னிய - பொருந்திய; தீஞ்சுனை - இனிய நீரையுடைய மலையில் உள்ள குளம்; சால் - மிகுந்த; திருமாலின் குன்றம் - திருவேங்கடம், திருப்பதிமலை; ஆயிடை - ஆகியவற்றின் நடுவில்; கட்புலம் - கண்ணால் காணும் அறிவு; ஆனாத - குறைவில்லாத; சீர் - புகழ்; அறைதல் - சொல்லுதல்.

## வினாக்கள்

1. தமிழ்த் தாயை எவர் மகளாக ஆசிரியர் கூறுகிறார்? அஃது எங்ஙனம் பொருந்தும்?

2. தமிழரசி எப்பகுதியில் ஆட்சி செலுத்துகிறாள்?

3. தமிழ்த் தாயின் இனிய தன்மையைப் புலவர் எவற்றிற்கு ஒப்பாகக் குறிப்பிடுகிறார்?

4. அம்மே! நின் சீர் முழுதும் அறைதல் யார்க்கு எளிதே! —இதன் பொருளை விளக்குக.

5. திருமாலின் குன்றம் எது? அதைப் பற்றி ஒரு வாக்கியம் எழுதுக.

## பயிற்சி

1. பிரித்தெழுதுக: வானார்ந்த, நற்கனி, தீஞ்சுனை, கட்புலம், அளித்தருளும், நூற்கடல், யார்க்கெளிதே, தென்குமரி, செங்கோல்.

2. மதி - சந்திரன், அறிவு; இது போல் இரண்டு பொருள் களையுடைய வேறு மூன்று சொற்கள் தருக.

3. நூற்கடல் - இங்கு நூல்கள் கடலுக்கு ஒப்பாகக் கூறப் பட்டுள்ளன. கிரணக்கை என்பதில் கைகள் கிரணங்களுக்கு ஒப்பாகக் கூறப்பட்டன.

4. பொதியின்மிசை - இதில் உள்ள மிசை என்பது ஏழாம் வேற்றுமை உருபாகும். இடப் பொருளில் வந்தது. ஏழாம் வேற்றுமையின் மற்றைய நான்கு உருபுகளை எழுதுக. இப் பாடலில் எட்டாம் வேற்றுமையில் வந்துள்ள சொற்கள் எவை?





## III. இயற்கை இன்பம்

### தாமரை

கண்ணுடித் தரையின் மீது
கண்கவர் பச்சைத் தட்டில்
எண்ணுத ஒளிமுத் துக்கள்
இறைந்தது போல்கு ளத்துத்
தண்ணீரி லேபட ர்ந்த
தாமரை இலையும் மேலே
தெண்ணீரின் துளியும் கண்டேன்
உவப்பொடு வீடு சேர்ந்தேன். (1)

சில நாட்கள் சென்ற பின்னர்க்
குளக்கரை சென்றேன்! பச்சை
இலைத்தட்டில் சிந்தும் பால்போல்
எழில்நீரும் கரிய பாம்பின்
தலைகள்போல் நிமிர்ந்தி ருந்த
தாமரைச் சிற்ற ரும்பும்
இலகுதல் காணப் பெற்றேன்
காட்சியில் இன்பம் பெற்றேன். (2)

மணியிருள் அடர்ந்த வீட்டில்
மங்கைமார் செங்கை ஏந்தி
அணிசெய்த நல்வி ளக்கின்
அழகிய பிழம்பு போலத்
தணிஇலைப் பரப்பி னிற்செந்
தாமரைச் செவ்வ ரும்பு
பிணிபோக்கி என்வி ழிக்குப்
படைத்தது பெருவி ருந்தே. (3)

—பாரதிதாசன்

## ஆசிரியர் குறிப்பு

**பாரதிதாசன்:** இவர் தற்காலத்தில் சிறந்து விளங்கும் புலவர்களில் ஒருவராவார். இவர் இயற்பெயர் கனக சுப்புரத்தினம் என்பது. புதுவையில் கல்வே கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராக இருந்து ஓய்வு பெற்றுள்ளார். இவருடைய பாடல்கள் எளிமையும் இனிமையும் மிக்க அழகும் உடையவை; சீர்திருத்தக் கருத்துக்கள் நிறைந்தவை. ஆதலால் மக்கள் இவரைப் புரட்சிக் கவிஞர் எனப் போற்றுகின்றனர். இவர் பல செய்யுள் நூல்களும், உரைநடை நூல்களும் எழுதியுள்ளார். நம் பாடப்பகுதி அவர் எழுதிய 'அழகின் சிரிப்பு' என்ற நூலில் உள்ளது.

## அருஞ்சொல் விளக்கம்

1. எண்ணுத - எண்ணமுடியாத, பல; தெண்ணீர்: தெள் + நீர், தெளிந்தநீர்; உவப்பு - மகிழ்ச்சி. (உவமைவிளக்கம்: தண்ணீர் - கண்ணுடித் தரை. தாமரையிலை - பச்சைத்தட்டு, இலையில் உள்ள தண்ணீர் - முத்துக்கள்.)

2. எழில் - அழகு; இலகுதல் - விளங்குதல்; (உவமை: தாமரை இலை - தட்டு. தாமரையிலையில் உள்ள நீர் - தட்டில் சிதறிய பால்; கரும் பாம்பின் தலை - தாமரையின் சிறிய அரும்பு: சிறிய அரும்பு கருமையாய் இருக்கும்.)

3. மணி - நீலமணி; செம்மை + கை = செங்கை; அணி - அழகு; பிழம்பு - ஒளித்தொகுதி; தணி - தண்ணீர் மட்டத்தில் படிந்துள்ள; செம்மை + அரும்பு = செவ்வரும்பு; பிணி - கவலை; விழி - கண். (உவமை: இருள் அடர்ந்த வீடு - இலை செறிந்த குளம்: விளக்குப் பிழம்பு - செந்தாமரை அரும்பு : மலரும் தருவாயில் உள்ள அரும்பு செந்நிறமாய் இருக்கும்.)

### வினாக்கள்

1. தாமரை யிலையில் உள்ள நீர்த்துளிகள் எவ்வாறுள்ளன?

2. தாமரைச் சிற்றரும்பு எங்ஙனம் காணப்படுகிறது?

3. விளக்கின் பிழம்புபோலக் காணப்படுவது எது: எங்ஙனம் ?

### பயிற்சி

1. பிரித்தெழுதுக: குளக்கரை, சிற்றரும்பு, செங்கை, பெருவிருந்து.

2. அறிந்துகொள்க: வாழை முதலிய இலைகளில் தண்ணீர் விழுந்தால் இலையோடு ஒன்றுபட்டுப் பொருந்தித் தோன்றும். ஆனல் தாமரையில் உள்ள தண்ணீர் தனித்து நிற்பது போல் காட்சியளிக்கும்.

3. இப்பாடல்களில் அமைந்த இயற்கைக் காட்சியைப் பத்து வரிகளில் எழுதுக.

# IV. அறவுரை

## 1. திருக்குறள்

### கடவுள் வாழ்த்து

தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது. (1)

### அறன் வலியுறுத்தல்

அறத்தான் வருவதே இன்பம் ; மற்றெல்லாம்
புறத்த புகழும் இல. (2)

### மக்கட் பேறு

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய். (3)

அன்பின் வழிய(து) உயிர்நிலை; அஃதிலார்க்(கு)
என்புதோல் போர்த்த உடம்பு. (4)

### அன்புடைமை

அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும். (5)

### விருந்தோம்பல்

அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்(து)
நல்விருந்து ஓம்புவான் இல். (6)

### இனியவை கூறல்

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்கு
அணி ;அல்ல மற்றுப் பிற. (7)

### செய்ந்நன்றி யறிதல்

காலத்தி னால்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. (8)

நடுவு நிலைமை

வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோற் செயின். (9)

அடக்கம் உடைமை

எல்லார்க்கும் நன்றும் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வம் தகைத்து. (10)

ஒழுக்கமுடைமை

ஒழுக்க முடைமை குடிமை ; இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும். (11)

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை ; இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி. (12)

பொறையுடைமை

ஒறுத்தார்க்(கு) ஒருநாளை இன்பம்; பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ். (13)

அழுக்காறுமை

அழுக்கா(று) எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும். (14)

வெஃகாமை

அறன்அறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
திறன்அறிந்து ஆங்கே திரு. (15)

புறங்கூறுமை

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்று தவர். (16)

தீவினை அச்சம்

இலன்என்று தீயவை செய்யற்க ; செய்யின்
இலன்ஆகும் மற்றும் பெயர்த்து. (17)

ஒப்புரவறிதல்

பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்ருல் செல்வம்
நயன்உடை யான்கட் படின். (18)

ஈகை

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். (19)

புகழ்

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல(து)
ஊதியம் இல்லை உயிர்க்கு. (20)

கூடாவொழுக்கம்

வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம்
தானறி குற்றப் படின். (21)

கள்ளாமை

உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல். (22)

வாய்மை

எல்லா விளக்கும் விளக்கல்ல ; சான்ருேர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு. (23)

வெகுளாமை

மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனுன் வரும். (24)

இன்னு செய்யாமை

பிறர்க்கின்ஞ முற்பகல் செய்யில் தமக்கின்ஞ
பிற்பகல் தாமே வரும். (25)

இறைமாட்சி

அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு. (26)

கல்வி

கண்ணுடையர் என்பவர் கற்றோர்; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர். (27)

தொட்டனைத்(து) ஊறும் மணற்கேணி; மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு. (28)

கல்லாமை

அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல். (29)

கேள்வி

எனைத்தானும் நல்லவை கேட்க ; அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். (30)

அறிவுடைமை

அறிவுடையார் ஆவ(து) அறிவார் ; அறிவிலார்
அஃ(து)அறி கல்லா தவர். (31)

குற்றங் கடிதல்

தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு. (32)

பெரியாரைத் துணைக்கோடல்

தம்மில் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையுள் எல்லாம் தலை. (33)

சிற்றினஞ் சேராமை

மனத்தான்ஆம் மாந்தர்க்(கு) உணர்ச்சி ;இனத்தான்ஆம்
இன்னான் எனப்படும் சொல். (34)

வலியறிதல்

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின். (35)

காலமறிதல்

கொக்கொக்க கூம்பும் பருவத்து ; மற்றதன்
குத்தொக்க சீர்த்த இடத்து. (36)

இடன் அறிதல்

நெடும்புனலுள் வெல்லும் முதலை ; அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற. (37)

தெரிந்து தெளிதல்

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். (38)

சுற்றம் தழாஅல்

பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில். (39)

செங்கோன்மை

அரியஎன்று ஆகாத இல்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின். (40)

கொடுங்கோன்மை

வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடா தெனின். (41)

பொச்சாவாமை

துளியின்மை ஞாலத்திற்(கு) எற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழும் உயிர்க்கு. (42)

ஊக்கம் உடைமை

உள்ளம் உடைமை உடைமை ; பொருள்உடைமை
நில்லாது நீங்கி விடும். (43)

மடியின்மை

மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்(கு)
அடிமை புகுத்தி விடும். (44)

ஆள்வினை உடைமை

அருமை உடைத்தென்(று) அசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். (45)

இடுக்கண் அழியாமை

இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன். (46)

அமைச்சு

வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ(டு)
ஐந்துடன் மாண்ட(து) அமைச்சு. (47)

வினைத்தூய்மை

பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல் குரவே தலை. (48)

வினைத் திட்பம்

எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின். (49)

வினைசெயல் வகை

சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது. (50)

### குறிப்பறிதல்

அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
கடுத்தது காட்டும் முகம். (51)

### நாடு

தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு. (52)

### நட்பு

நிறைநீர நீரவர் கேண்மை ; பிறைமதிப்
பின்நீர பேதையார் நட்பு. (53)

### நட்பாராய்தல்

மருவுக மாசற்ருர் கேண்மைஒன்(று) ஈத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு. (54)

### குடிமை

அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்தல் இலர். (55)

### மானம்

மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னர்
உயிர்நீப்பர் மானம் வரின். (56)

### பெருமை

மேல்இருந்தும் மேல்அல்லார் மேல்அல்லர் ; கீழ்இருந்தும்
கீழ்அல்லார் கீழ்அல் லவர். (57)

### சான்ருண்மை

அன்புநாண் ஒப்புரவு கண்ணேட்டம் வாய்மையோடு
ஐந்துசால்பு ஊன்றிய தூண். (58)

குடிசெயல் வகை

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. (59)

உழவு

இரவார் இரப்பார்க்(கு) ஒன் றீவர் கரவாது
கைசெய்(து) ஊண் மாலை யவர். (60)

ஆசிரியர் குறிப்பு

திருக்குறளின் ஆசிரியர் திருவள்ளுவர். இவர் மயிலாப்பூரில் பிறந்தவர். இவருடைய தாய் தந்தையர் ஆதி, பகவன் என்பர். காலம் : கி. பி. 2-ஆம் நூற்றாண்டு. இவர் உலகத்தார் யாவரும் போற்றிக் கொண்டாடத்தக்க பெரும் புலவராவார்.

திருக்குறள் : குறள்—இரண்டடிப் பாட்டு. இந்நூல் சிறந்த இரண்டடிப் பாட்டுக்களாலேயே இயற்றப்பெற்றுள்ளமை யின் இப் பெயர் பெற்றது. இந்நூல் பதினெண்கீழ்க் கணக்கு நூல்களில் ஒன்று. இஃது அறத்துப் பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற மூன்று பெரும் பிரிவுகளை யுடையது. அதிகாரத்திற்குப் பத்துப் பாடல்களாக 133 அதிகாரங்களைக் கொண்டது. இந்நூல் சாதி, மதம், நாடு, மொழி முதலிய வேற்றுமைகள் இல்லாமல் எல்லா மக்களுக்கும் உரிய பொது நூலாகும். உலகிலுள்ள சிறந்த பல மொழிகளிலும் மொழி பெயர்க்கப்பட்டுள்ளமையே இதன் பெருமையை விளக்கும். 'ஆலும் வேலும் பல்லுக்கு உறுதி, நாலும் இரண்டும் சொல்லுக்கு உறுதி,' என்பது இந்நூலைப்பற்றி வழங்கும் பழமொழியாகும்.

அருஞ்சொல் விளக்கம்

1. உவமை - ஒப்பு ; சேர்ந்தார் - இடைவிடாது நினைத்த வர் ; கவலை - துன்பம் ; மாற்றல் - நீக்குதல் ; மனம் + கவலை. தனக்கு + உவமை.

2. மற்று எல்லாம் - ஏனைய செயல்கள் எல்லாம் ; புறத்த - துன்பம் தருவன.

3. ஈன்ற பொழுதில் - பெற்ற காலத்தினும் ; சான்றோன் - அறிவொழுக்கங்களில் சிறந்தவன். பெரிது + உவக்கும்.

4. வழியது - பொருந்தியது ; உயிர்நிலை - உயிர் நிலைத் துள்ள உடம்பு ; அஃது - அவ்வன்பு ; என்பு - எலும்பு.

5. தாழ் - தாழ்ப்பாள் ; ஆர்வலர் - அன்புடையவர் ; புன்கணீர் - சிறு கண்ணீர் ; பூசல்தரும் - வெளிப்படுத்திவிடும்.

6. அகன் அமர்ந்து - மனம் விரும்பி ; செய்யாள் - இலக்குமி ; உறையும் - வாழ்வாள்.

7. அணி - ஆபரணம் ; மற்றுப்பிற - ஏனைய பொன்னும் மணியும் முதலான ஆபரணங்கள்.

8. காலத்தினால் - ஆபத்துச் சமயத்தில் ; ஞாலத்தின் - பூமியைவிட ; மாண - மிகவும்.

9. பேணி - விரும்பி ; பிறவும் - பிறருடைய பொருள்களை யும் ; தமபோல் - தம்முடைய பொருள்களைப்போல் எண்ணி.

10. பணிதல் - அடக்கம் ; செல்வம் தகைத்து - மற்றும் ஒரு செல்வம் போன்ற சிறப்பினையுடையது.

11. இழுக்கம் - ஒழுக்கத்தினின்று தவறுதல்.

12. எய்துவர் - அடைவர் ; எய்தாப்பழி - ஒருவரும் அடைய விரும்பாத பழி.

13. ஒறுத்தார்க்கு - தண்டித்தவர்க்கு ; பொன்றும் துணையும்- இறக்கும் வரையிலும்.

14. அழுக்காறு - பொறாமை ; திரு செற்று - செல்வத்தை அழித்து ; தீ உழி - தீய நரகம் ; உய்த்துவிடும் - செலுத்திவிடும்.

15. வெஃகா - பிறர் பொருளை விரும்பாத ; திறன் - வகை ; திரு - இலக்குமி.

16. பக - பிரியும்படி ; கேளிர் - நண்பர் ; நக - மகிழுமாறு ; தேற்றாதவர் - தெளியாதவர்.

17. இலன் என்று - வறியவன் என்று எண்ணிக்கொண்டு ; செய்யற்க - செய்யாதே ; இலன் ஆகும் - வறியவன் ஆவான் ; பெயர்த்து - மேலும்.

18. பயன் மரம் - பயனைத் தரத்தக்க மரம் ; அற்று - போன் றது ; ஆல் - அசை ; நயன் உடையான் கண் - உதவி செய்பவ னிடத்தில் ; படின் - சேர்ந்தால்.

19. ஈத்து - கொடுத்து ; தாம் உடைமை - தம் செல்வத்தை ; வன்கணவர் - கொடுமைக்குண முடையவர்.

20. இசைபட - புகழ் உண்டாக ; ஊதியம் - பயன்.

21. வான்உயர் - மிக உயர்வான ; தோற்றம் - தவவேடம்.

22. உள்ளல் - நினைத்தல் ; கள்ளம் - வஞ்சனை ; கள்வேம் - கவர்ந்துகொள்வோம் ; எனல் - என்று சொல்லக்கூடாது.

23. பொய்யா - பொய் கூறுமையாகிய ; விளக்கு அல்ல - சிறந்த விளக்குகள் ஆகமாட்டா.

24. மறத்தல் - மறக்க வேண்டும் ; வெகுளி - கோபம்.

25. இன்ன - துன்பங்கள் ; முற்பகல் × பிற்பகல்.

26. எஞ்சாமை - குறைவுபடாதிருத்தல்.

28. மணல் கேணி - மணற் பாங்கான இடத்திலுள்ள கிணற்று நீர் ; தொட்ட அனைத்து - தோண்டிய அளவுக்கு ஏற்றபடி.

29. அரங்கு - ஆடும் இடம் ; வட்டு - சூதாட்டம் ; கோட்டி - கற்றோர் கூட்டம்.

30. எனைத்து - எவ்வளவு சிறு அளவினது ; கேட்க - கேட்க வேண்டும் ; ஆன்ற - மிக்க.

31. ஆவது - பின்னர் நேரப்போவது ; அஃது - பின்னால் வருவதை.

32. காண்கிற்பின் - கண்டால் ; இறைக்கு - தலைவனுக்கு.

33. தமரா - தம் உறவினராக ; ஒழுகுதல் - சேர்ந்து பழகுதல் ; தலை - சிறந்தது.

34. உணர்ச்சி - அறிவு ; இன்னன் - இப்படிப்பட்டவன்.

35. பீலி - மயிலின் தோகை ; சாகாடு - சக்கரங்களையுடைய வண்டி ; இறும் - முறியும் ; மிகுத்து - மிகுதியாக.

36. கூம்பும் - அடங்கி இருக்கவேண்டிய ; பருவம் - காலம் ; சீர்த்த இடத்து - தக்க சமயம் வந்தபோது.

37. நெடும் புனல் - மிக ஆழமான நீர்நிலை ; அடும் - கொல்லும்.

38. கருமம் - செயல் ; கட்டளைக் கல் - பொன்னின் மாற்றை அறிவிக்கும் கல்.

39. கொடையான் - கொடுப்பவன் ; வெகுளி பேணன் - கோபம் கொள்ளாதவன் ; மருங்கு - பக்கம் ; மா - பெரிய.

40. பொச்சாவாக் கருவி - மறதி இல்லாத மனமாகிய கருவி ; போற்றி - எண்ணி.

41. வென்றி - வெற்றி ; கோடாது எனின் - வளையாது என்றால்.

42. துளி - மழை ; ஞாலம் - உலகம் ; எற்று - எவ்வளவோ ; அளி - கருணை.

43. உள்ளம் - ஊக்கம் ; உடைமை - உண்மையான செல்வம்.

44. மடிமை - சோம்பி இருத்தல் ; ஒன்னூர் - பகைவர்.

45. அருமை உடைத்து - இக்காரியத்தைச் செய்தல் கடினமானது ; அசாவாமை - மனம் சோர்வு அடையாமை.

46. விழையான் - விரும்பாதவனாகி ; இடும்பை - துன்பம் ; உறுதல் - அடைதல்.

47. வன்கண் - போரில் அஞ்சாமை ; ஆள்வினை - விடா முயற்சி ; மாண்டது - பெருமையுடையது ; அமைச்சு - மந்திரி.

48. மலைந்து - மிகுந்து ; ஆக்கம் - செல்வம் ; கழி - மிக்க ; நல்குரவு - வறுமை ; தலை - சிறந்தது.

49. எய்துப - அடைவார்கள் ; திண்ணியார் - மன உறுதி உடையவர்.

50. சூழ்ச்சி - ஆலோசனை ; தாழ்ச்சி - தாமதம்.

51. பளிங்கு - தூய்மையான ஒரு வகைக் கல் ; கடுத்தது - நினைத்தது.

52. தள்ளா விளையுள் - குறையாத விளைவு ; தக்கார் - உயர்ந்த அறிவு ஒழுக்கங்களால் சிறந்தவர்.

53. பிறை நிறை நீர - குறைந்த மதி பின் நிறையும் தன்மை போன்ற தன்மையுடையன ; பேதையர் - அறிவில்லாதவர்.

54. மருவுக - விரும்பிச் சேர்க ; மாசு - குற்றம் ; கேண்மை - நட்பு ; ஒருவுக - நீங்குக ; ஒப்பிலார் - தீயவர்கள்.

55. அடுக்கிய - பல ; குன்றுவ - ஒழுக்கத்தை அழிக்கும் செயல்கள்.

56. நீப்பின் - நீங்கினால் ; கவரி மா - கவரி மான் ; அன்னார்- போன்றவர் ; மானம் வரின் - பெருமை கெட நேருமாயின்.

57. மேல் - உயர்ந்த குலம், உயர்ந்த குணம் ; கீழ் - தாழ்ந்த குலம், தாழ்ந்த குணம் ; அல்லார் - இல்லாதவர்.

58. ஒப்புரவு - உபகாரம் செய்தல் ; கண்ணோட்டம் - தாட்சணியம் ; சால்பு - பெருந்தன்மை.

59. குடிசெய்து - தம் குலத்தை வளரச்செய்து ; உலகு - உலக மக்கள்.

60. இரவார் - யாசிக்கமாட்டார் ; இரவார் × இரப்பார் ; கரவாது - வஞ்சனையில்லாமல் ; கை செய்து - உழவுத் தொழில் செய்து; ஊண் மாலையவர் - உணவை உண்ணும் இயல்புடையவர்.

## 2. நீதி வெண்பா

### கற்ருர் கல்லாதார் இயல்பு

வாக்குநயத் தாலன்றிக் கற்றவரை மற்றவரை
ஆக்கைநயத் தாலறியல் ஆகாதே—காக்கையொடு
நீலச் சிறுகுயிலே நீடிசையால் அன்றியே
கோலத் தறிவருமோ கூறு. (1)

### மூவகை ஈகையாளர்

உத்தமர்தாம் ஈயுமிடத் தோங்குபனே போல்வரே
மத்திமர்தாம் தெங்குதனே மானுவரே—முத்தலரும்
ஆங்கமுகு போல்வர் அதமர் ; அவர்களே
தேங்கதலி யும்போல்வர் தேர்ந்து. (2)

### நல்லோர் நட்பு

பாலின்நீர் தீயணுகப் பால்வெகுண்டு தீப்புகுந்து
மேலும்நீர் கண்டமையும் மேன்மைபோல்—நூலின்நெறி
உற்ருர் இடுக்கண் உயிர்கொடுத்தும் மாற்றுவரே
மற்ருேர் புகல மதித்து. (3)

### குறிப்பு

நீதி வெண்பா : பல நீதிகள் அடங்கிய வெண்பாக்களால் ஆகிய நூல். ஆசிரியர் இன்னுரென்று தெரியவில்லை. ஔவையா ரென்று சிலர் கூறுவர்.

### அருஞ்சொல் விளக்கம்

1. வாக்கு - சொல் ; நயம் - அழகு ; மற்றவரை - கல்லாத வரை ; ஆக்கை - உடல் ; நீடிசை - நீண்டகுரல் ; நீலம் - கருமை; கோலத்து - உருவத்தால்.

2. ஈயும் இடத்து - கொடையில் ; தெங்கு - தென்னே ; மானுவர் - போல்வர் ; முத்து அலரும் - முத்துப்போல் மலரும் ; கமுகு - பாக்கு மரம் ; தேம் கதலி - வாழை ; அதமர் - கீழோர் ; மத்திமர் - இடைத்தரமானவர் ; உத்தமர் - உயர்ந்தோர்.

3. வெகுண்டு - கோபித்து ; அமையும் - அமைதி அடையும் ; இடுக்கண் - துன்பம் ; மற்றோர் - மற்றவர்கள் ; புகல - புகழ்ந்து கூற ; மதித்து - பெருமைப்படுத்தி.

### வினாக்கள்

1. கற்றவரை எதனால் அறியலாம்? எதனால் அறிதல் கூடாது?

2. காக்கையும் குயிலும் எவ்விதத்தில் ஒற்றுமையுடையன? எதில் அவை வேறுபாடுடையன?

3. உத்தமர், மத்திமர், அதமர்—இவர்களுக்கு எவை உவமையாகக் கூறப்பட்டுள்ளன? அவ்வுவமைகள் எவ்வாறு பொருந்தும்?

4. சிறந்த நட்புக்குப் பாலை எப்படி உவமை கூறலாம்?

5. நூலறிவாரின் தன்மை யாது?

### பயிற்சி

1. பிரித்தெழுதுதல் : நீடிசை - நீடு + இசை; தீயணுக - தீ + அணுக ; தீப்புகுந்து - தீ + புகுந்து .

2. பிரித்தெழுதுக : நயத்தாலறியல், சிறுகுயில், முதீதலரும்.

## 3. நான்மணிக் கடிகை

கள்ளி வயிற்றின் அகில்பிறக்கும் மான்வயிற்றில்
ஒள்ளரி தாரம் பிறக்கும் பெருங்கடலுள்
பல்விலைய முத்தம் பிறக்கும் அறிவார்யார்
நல்லாள் பிறக்கும் குடி. (1)

திரியழல் காணின் தொழுப ; விறகின்
எரியழல் காணின் இகழ்ப—ஒரு குடியில்
கல்லாது மூத்தானைக் கைவிட்டுக் கற்றான்
இளமைபா ராட்டு முலகு. (2)

நாற்றம் உரைக்கும் மலருண்மை ; கூறிய
மாற்றம் உரைக்கும் வினைநலம் ;—தூக்கின்
அகம்பொதிந்த தீமை மனமுரைக்கும் ; முன்னம்
முகம்போல முன்னுரைப்ப தில். (3)

—விளம்பி நாகனார்

### ஆசிரியர் குறிப்பு

**நான்மணிக்கடிகை :** இதன் ஆசிரியர் விளம்பி நாகனார். நான்கு + மணி + கடிகை. கடிகை—துண்டு. இந் நூலில் நான்கு இரத்தினத் துண்டுகளைப்போல ஒவ்வொரு செய் யுளிலும் நான்கு நீதிகள் கூறப்பட்டுள்ளன. அதனால் இந்நூல் இப்பெயர் பெற்றது. இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று.

### அருஞ்சொல் விளக்கம்

1. கள்ளி - ஒருவகைச்செடி ; அகில் - சந்தனக்கட்டை போன்றதொரு வாசனைக்கட்டை ; ஒள் - ஒளிபொருந்திய ; அரி தாரம் - கஸ்தூரி ; முத்தம் - முத்து. ஆள் - மனிதன்.

2. அழல் - தீ ; தொழுப - தொழுவார்கள் ; இகழ்ப - இகழ் வார்கள்.

3. நாற்றம் - மணம் ; மாற்றம் - சொல் ; தூக்கின் - ஆராய்ந்தால் ; அகம் பொதிந்த - மனத்தில் மறைந்துள்ள ; முன்னம் - குறிப்பு.

### வினாக்கள்

1. அகில், அரிதாரம், முத்தம் இவை எங்கெங்குப் பிறக்கும்? இதனால் அறியப்படும் நீதி யாது ?

2. உலகத்தினர் எவனைப் பாராட்டுவர் ? ஏன் ?

3. கற்ற இளையவனுக்குத் தரப்பட்ட உவமை எது ?

4. ஒருவன் எண்ணத்தை அறிவிப்பது எது ? இதனோடு சேர்த்துக் கூறப்பட்ட மற்றைய மூன்று நீதிகள் எவை ?

### பயிற்சி

1. சேர்த்தெழுதுக :—ஒள் + அரிதாரம் ; பெருமை + கடல் ; முன் + உரைப்பது ; நல் + ஆள்.

## 4. சதகங்கள்

### 1. திருவேங்கட சதகம்

#### கல்வியின் சிறப்பு

தெள்ளமுதம் அனையகல் விப்பொருள் படைத்திடில்
தேசமெல் லாந்துதிக்கும்;
செயத்தம்பம் ஆனபுகழ் நிலைநிற்கும் இவையெ
செம்பொன்மிகு செல்வமதுபோல் [லாம்;
வெள்ளமது கொளுமெனும் பயமில்லை; கனலினல்
வெம்பவரு சலனமில்லை;
வேந்தர்கள் பறித்திடக் கூடாது; சோதரர்
விரும்பினும் பங்குருது;
கள்ளரால் திருடவும் முடியாது; வரவரக்
கனமலால் குறைவுருது;
கருணைஞா னந்தழையும் ஆகையால் உனையிதய
கமலத்தில் வைப்பதெளிதாம்;
வள்ளலென வருகின்ற மாடபூ சியரதிபன்
மணவாள நாராயணன்
மனிதிலுறை அலர்மேலு மங்கைமண வாளனே!
வரதவேங் கடராயனே!

—வெண்மணி நாராயண பாரதியார்

### 2. குமரேச சதகம்

#### உயர்ந்தோர் வறியராயினும் உயர்ந்தோரே

தங்கமா னதுதழலின் நின்றுருகி மறுகினும்
தன்னெளி மழுங்கிடாது;
சந்தனக் குறடுதான் மெலிந்து தேய்ந்தாலுமே
தன்மணம் குன்றிடாது;

பொங்கமிகு சங்குசெந் தழலில் வெந்தாலுமே
பொலிவெண்மை குறைவுருது ;
போதவே காய்ந்துநன் பால்குறுகி னலும் ;
பொருந்துசுவை போய்விடாது ;
துங்கமணி சாணையில் தேய்ந்துவிட் டாலுமே
துலங்குகுணம் ஒழியாதுபின்
தொன்மைதரு பெரியோர் மடிந்தாலும் அவர்
தூயநிறை தவருகுமோ ! [களது
மங்களகல் யாணிகுற மங்கைசுர குஞ்சரியை
மருவுதிண் புய வாசனே !
மயிலேறி விளையாடும் குகனே ! புல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே !

—குருபாத தாசர்

குறிப்பு

சதகங்கள் : நூறு பாடல்கள் கொண்ட நூலுக்குச் சதகம் என்று பெயர். இச்சதகங்கள் பல உதாரணங்களுடன் அரிய நீதிகளை அறிவிக்கின்றன. திருவேங்கடத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைத் துதிக்கும் பாடல்கள் அடங்கிய நூல் திருவேங்கட சதகமாம். புல்வயல் என்னும் திருப்பதியில் வீற்றிருக்கும் முருகப்பிரானைக் குறித்துப் பாடிய நூல் குமரேச சதகமாம்.

வெண்மணி நாராயண பாரதியார் : இவர் களமூரை அடுத்த வெண்மணி என்னும் ஊரில் பிறந்தவர் ; வைணவமதத்தினர்; களமூரில் பெருவள்ளலாக வாழ்ந்த மணவாள நாராயணன் என்பவரால் ஆதரிக்கப் பெற்றவர்.

குருபாத தாசர் : இவர் புதுக் கோட்டைக்கு அருகிலுள்ள புல்வயல் என்ற ஊரில் பிறந்தவர். முத்து மீனுட்சிக் கவிராயர் என்பது இவரது இயற்பெயராம். காலம் : ஏறக்குறைய இரு நூறு ஆண்டுகளுக்கு முன்னிருந்தவர்.

அருஞ்சொல் விளக்கம்

1. தேசம் - உலகமக்கள்; செயத் தம்பம் - வெற்றித் தூண்; கனல் - நெருப்பு ; வெம்ப - வெந்துவிட ; சலனம் - அழிவு ;

சோதரர் - உடன் பிறந்தோர் ; பங்கு+உருது - பங்காகப் பொருந்தாது. கனம் - பெருமை பெறுதல் ; தழையும் - பெருகும்; இதய கமலம் - மனமாகிய தாமரை ; மாடபூசியர் - மாடபூசி என்னும் குடியில் பிறந்தவர் ; அலர் மேலு மங்கை - செந்தாமரை யில் வாழும் இலக்குமி ; மணவாளன் - கணவன் ; வரதன் - வரங் களைத் தருபவன்.

2. தழல் - நெருப்பு ; மறுகினும் - வருந்தினுலும், காய்ச்சப் பட்டாலும் ; குறடு - கட்டை ; பொங்க மிகும் - சிறப்பு மிகுந்த ; பொலி வெண்மை - சிறந்து விளங்கும் வெண்மையாகிய நிறம் ; போதவே - மிகுதியாக ; குறுகினுலும் - வற்றினுலும் ; துங்க மணி - உயர்ந்த இரத்தினம் ; தொன்மை - பழமை; மடிந்தாலும்- வறுமையடைந்தாலும் ; நிறை - பெருமை ; குறமங்கை - வள்ளி; சுரகுஞ்சரி - தேவயானை ; புயம் - தோள் ; குகன் - முருகன்.

## வினக்கள்

1. கல்வியால் ஒருவர் பெறத்தக்க பயன்கள் யாவை ?
2. செல்வத்திற்கு எவற்றல் அழிவு உண்டாகும் ?
3. கல்வி பொருளைவிட எவ்வகைகளில் சிறந்தது ?
4. உயர்ந்தோர்க்குத் தரப்பட்டுள்ள உவமைகள் எவை ?
5. உயர்ந்தோர்க்குப் பொன்னையும் பாலையும் உவமை கூறுதல் எவ்வாறு பொருந்தும் ?
6. குமரேச சதகப் பாடல் உணர்த்தும் நீதியை எழுதுக.
7. முருகப் பிரானைக் குருபாத தாசர் எவ்வாறு போற்று கிருர் ?

## பயிற்சி

1. பிரித்தெழுதுக :—மனதிலுறை, செந்தழல், துங்கமணி, மயிலேறி.

2. குமரேச சதகத்தில் தரப்பட்டுள்ள உவமைகளைப் போன்ற மற்றிரண்டு உவமைகள் தருக.

3. கல்வியின் சிறப்பைப்பற்றிப் பதினைந்து வரிகளில் எழுதுக.



# V. கதை

## 1. ஆசிய ஜோதி

### அண்ணலின் வினா

“மாலைப் பொழுதின்னும் ஆகவில்லை—வெயில்
மண்டை பிளந்து வெடிக்குதையோ
சாலை வழியிந்த ஆடுகளும்—எங்கு
சாய்ந்து செலுமையா கூறும்” என்றான். (1)

### இடையர்மறுமொழி கூறுதல்

அம்மொழி கேட்டவ் விடையருமே—“எம்மை
ஆளும் இறைவன தாணையினால்,
செம்மறி நூறுவெள் ளாடும் ஒருநூறு
சேர்த்து வருகிறோம்” என்றுரைத்தார். (2)

இன்றிரா யாகம் முடியுதென்றார்—அதில்
இத்தனை யுங்கொலை யாகுமென்றார்
நின்றுசொல நேரம் இல்லையென்றார்—இன்னும்
நீண்ட வழிபோக வேண்டுமென்றார். (3)

புத்தர் பிரான் யாகசாலைக்கு நடத்தல்

வள்ளலும் உள்ளம் வருந்தியானும்—அந்த
மாமகம் காண வருவேனென்று
துள்ளும் மறியுஞ் சுமந்துகொண்டு—தாயும்
சோர்ந்து தொடர வழிநடந்தார். (4)

வையமிசை உயிர்கள்படுந் துயரை எண்ணி
மறுகும்உளத் தயலொன்றும் அறியா ளுகி
ஐயனும்அவ் வீதிவழி நடந்து மன்னன்
அரியமகஞ் செய்யுமிடம் அணுகி ளுனே. (5)

யாகசாலை வருணனை

தாரணி மன்னவன் பிம்பிசாரன்—யாக
சாலை நடுவினில் வந்துநின்றுன்
ஆரணம் ஓதிய அந்தணரும்—நிரந்து
அங்கிரு பக்கமாய்க் கூடிநின்ருர். (6)

அறவுரை கூறுதல்

நின்றவர் கண்டு நடுங்கினரே—ஐயன்
நேரிலே நிற்கவும் அஞ்சினரே
துன்று கருணை நிறைந்தவள்ளல்—அங்கு
சொன்ன மொழிகளைக் கேளுமையா! (7)

வாழும் உயிரினை வாங்கிவிடல்—இந்த
மண்ணில் எவர்க்கும் எளிதாகும்
வீழும் உடலை எழுப்புதலோ—ஒரு
வேந்தன் நினைக்கினும் ஆகாதையா. (8)

ஆட்டின்கழுத்தை அறுத்துப் பொசுக்கிநீர்
ஆக்கிய யாகத் தவியுணவை
ஈட்டும்கருணை இறையவர் கைகளில்
ஏந்திப் புசிப்பரோ கூறுமையா! (9)

மைந்தருள் ஊமை மகனை ஒருமகன்
வாளால் அறிந்து கறிசமைத்தால்
தந்தையும் உண்டு களிப்பதுண்டோ இதைச்
சற்றுநீர் யோசித்துப் பாருமையா. (10)

ஆயிரம் பாவங்கள் செய்தவெல்லாம்—ஏழை
ஆட்டின் தலையோ டகன்றிடுமோ
தீயவும் நல்லவும் செய்தவரை—விட்டுச்
செல்வ தொருநாளு மில்லைஐயா. (11)

ஆதலால் தீவினை செய்யவேண்டாம்—ஏழை
ஆட்டின் உயிரையும் வாங்கவேண்டாம்
பூதலந் தன்னை நரகம தாக்கிடும்
புத்தியை விட்டுப் பிழையுமையா. (12)

வாய்பேசா உயிரெல்லாம் வாய்பெற் றங்கு
வாதாடி வழக்கிட்ட வாறீ தென்னத்
தாய்போலுந் தயவுடைய தரும மூர்த்தி
சாற்றியநல் லறவுரைகள் யாவுங் கேட்டு. (13)

" செய்பிழை யாவும் பொறுத் தருள்வீர் "—எனச்
சேவித்து மன்னனும் தாழ்ந்து நின்றான்.
" ஐயனே நாட்டில் கொலை தவிர்த்து—நாளை
ஆணையும் கட்டுவேன் " என்றுரைத்தான். (14)

—கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

ஆசிய ஜோதி :—ஆசிய நாட்டில் (இந்தியாவில்) பிறந்த புகழ்மிக்க புத்தரின் வரலாற்றைக் கூறும் நூலாதலின் இப்பெயர் பெற்றது.

அருஞ்சொல் விளக்கம்

2. இறைவன் - அரசன், பிம்பிசாரன்; ஆணை - கட்டளை.

3. யாகம் - வேள்வி.

4. வள்ளல் - புத்தர் ; மகம் - யாகம் ; மறி - ஆட்டுக்குட்டி.

5. வையம் - உலகம் ; மறுகும் - வருந்தும்.

6. தாரணி - பூமி ; ஆரணம் - வேதம் ; நிரந்து - வரிசை யாக.

7. ஐயன் - புத்தன் ; துன்று - மிக்க.

8. வாங்கிவிடல் - போக்குதல்.

9. அவி - யாகத்தீயில் தேவர்களுக்காக இடப்படும் உணவு; ஈட்டும் - மிக்க ; இறையவர் - தேவர்கள்.

12. பூதலம் - பூமி.

13. சாற்றிய - கூறிய ; தருமமூர்த்தி - புத்தர்.

14. சேவித்து - வணங்கி ; ஆணையும் கட்டுவேன் - கட்டளை இடுவேன்.

## வினுக்கள்

1. ஆட்டிடையர் புத்தருக்குக் கூறிய செய்தி யாது ?

2. புத்தர் பிம்பிசாரனுக்குக் கூறிய அறிவுரைகள் யாவை ?

3. யாகத்தில் கொடுக்கப்படும் அவியுணவைத் தேவர்கள் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள் என்பதற்குப் புத்தர் என்ன காரணம் கூறினுர் ?

4. 'பூதலந்தன்னை நரகமதாக்கிடும் புத்தி' என்று குறிப் பிடப்படுவது யாது ?

5. பிம்பிசாரன் புத்தருக்குக் கொடுத்த வாக்குறுதி யாது ?

6. 'யானும் அந்த மாமகம் காண வருவேன்'—சந்தர்ப்பம் கூறுக.

## பயிற்சி

1. பிரித்தெழுதுக :—இன்றிரா, களிப்பதுண்டோ, நரகம தாக்கிடும், நல்லறவுரை.

2. யாகம், புத்தர் என்ற பொருளுடைய வேறு சொற்களை எழுதுக.

3. ஆடுகள் தங்கள் குறைகளைத் தாமே முறையிடுவது போலப் பத்து வரிகள் எழுதுக.



## 2. அறம் வளர்த்த அண்ணல்

புண்ணியப் பதியாம் காஞ்சி
புரத்தினை யடுத்த ஊரில்
புண்ணிய கோட்டி யென்னும்
புகழ்மிகு பெயரா னேங்கும்
கண்ணியப் பெரியார் வாழ்ந்தார் ;
கருத்தொடும் அவரை நாளும்
நண்ணிடும் வறிஞர் யார்க்கும்
நயந்துநல் லறங்கள் செய்வார். (1)

பொருளிலா வறிய ரேனும்
பொருந்திய அறத்தை என்றும்
ஒருவிடா தாற்றும் நாளவ்
வூரினில் விழாவைக் காணப்
பெருகிய விருப்பி னேடும்
பெருந்திர ளாக மக்கள்
நெருங்கினர் வழிப்போக் கன்போல்
நிருபனும் ஆங்குச் சென்றான். (2)

வந்தவர் தம்முள் நல்ல
வயோதிகன் ஒருவன் தானே
நொந்தனன் பசியால் நோயால்
வீழ்ந்தனன் மரத்தின் கீழே
அந்தநல் விழாவைக் காண்பார்
அனைவரும் அவனைக் கண்டும்
சிந்தைசெய் யாது சென்றார்
சிறிதும்நல் லருளில் லாமல். (3)

பொருந்திய அன்பு மிக்க
புண்ணிய கோட்டி கண்டார் ;
வருந்தினர் ; உளந்து டித்தார் ;
வயோதிகன் கையைப் பற்றித்
திருந்தவே அழைத்துச் சென்று
திகழ்தரு மனைக்கொண் டுய்த்தும்
அருந்திட உணவு தந்தும்
அன்புடன் உப சரித்தார். (4)

மனைவியும் தாமு மாக
மருந்தளித் துறுநோய் போக்கிக்
கனிவுறும் உளத்த ராகிக்
கண்ணிமை போலக் காத்தார் ;
அனையவர் புரிந்த ஈகை
அறிந்தநற் காஞ்சி வேந்தன்
இனைவுறும் வறுமை யுற்றும்
ஈதல்கண் டதிச யித்தான். (5)

கடமையை மறவா வேந்தன்
கனிவுடன் வழிப்போக் கன்போல்
திடமுடன் நூறு பொன்கள்
சேர்ந்ததோர் முடிப்பைத் தந்தே,

"கடவுளைக் கோயிற் கண்டு
களித்தபின் பெறுவேன்," என்று
நடந்தனன் ; பின்ப வன்தான்
நண்ணிலன் பொன்னை வாங்க. (6)

பின்பொரு நாளி ராவில்
பெருமழை பெய்யும் போது
துன்புற்றே இருவர் வந்தார்
சோர்வுற்ற குழந்தை யோடும்
அன்புறு வள்ளல் கண்டார் ;
அவர்துயர் அறிந்து நாளை
இன்பமாய்த் தாமு டுக்க
எண்ணிய ஆடை தந்தார். (7)

கணவரும் மனையு மாக
வந்தவர் கவலை நீங்க
உணவிட்டே உபச ரித்தார்
உண்டவர் உளங்கு ளிர்ந்தே
இணங்கிய வள்ள லாரும்
இன்குண மனைவி யாரும்
உணவொடும் ஆடை ஈந்த
உயர்குணம் போற்றி னரே. (8)

திண்ணையில் அவரு றங்கச்
செய்வன செய்த பின்னர்ப்
புண்ணியப் பெரியார் தாமும்
புகழ்குண மனைவி யாரும்
உண்ணவே வைத்தி ருந்த
உணவினை ஈந்த தாலே
கண்ணயர்ந் துறங்கி னர்கள்
கப்பிய பசியி னோடும். (9)

பொழுதது புலர்ந்த பின்னர்ப்
புண்ணிய கோட்டி யார்தாம்
எழுந்துசென் றவரைக் கண்டார் ;
ஏமாற்றம் கொண்டார் ; நல்ல
தொழுந்தகை விருந்தி னர்கள்
சொல்லாமல் சென்று விட்டார் ;
அழுந்தினர் துன்ப வெள்ளத்(து)
அகங்கரைந் துருகி னரே. (10)

இன்னவா றெழுகு நாளில்
எழில்மிகும் அவ்வூர் ஏரி
நன்னய மாகச் செப்பம்
நயமுடன் புரியும் போதில்
பொன்னிறை குடமொன் றங்கே
புவியினில் கண்ட ஊரார்
பன்னலம் வாய்ந்த காஞ்சிப்
பார்த்திபற் குணர்த்தி னரே. (11)

நலமுறு காஞ்சி வேந்தன்
நல்லானென் றியம்பும் பேரான்
"இலகுறும் பொற்கு டத்தை
என் செய்வோம்," என்று கேட்கப்
பலவகை அமைச்சர் சொன்னர் ;
பார்த்திபன் நினைந்து பார்த்து
அலகில்சீர் வள்ளல் புண்ய
கோட்டியை அழைப்பித் தானே. (12)

"எளியவர்க் கிரங்கும் நல்ல
இன்குண வள்ள லே ! நீர்
தெளிவொடும் புரிந்த நல்ல
சீர்மிகும் அறங்கள் கண்டேன் ;

அளியொடும் அகம்கு ழைந்தே
அன்றொரு வயோதி கன்தன்
நளிர்சுர மதனைப் போக்கி
நல்லுண வளித்துக் காத்தீர். (13)

“ அந்தவா றுதவி செய்த
அருங்குணங் கண்டு நானும்
சிந்தையில் களிப்புக் கொண்டேன் ;
செழிக்கநும் அறந்தான் என்றே
வந்தனன் வழிப்போக் கன்போல்
வழங்கினேன் பொன்மு டிப்பை
எந்திரு மனைபு குந்தே
இயம்பினன் புலவர் தம்பால். (14)

“ முன்பொரு மழைநா ளில்நீர்
முனிவிலா துபச ரித்த
அன்பரிப் புலவ ரேதாம்
அருங்குணப் பெரியீர் நுந்தம்
இன்புறு குணங்கள் கண்டே
இனியநும் அறம்செ ழிக்க
அன்புடன் உதவ எண்ணி
அழைத்தனன் உம்மை இங்கே. (15)

“ இந்தநற் பொருளைப் பெற்றே
ஈகையை வளர்த்து வாழ்க !
எந்திரு அனையீர் !” என்று
ஈந்தனன் பொற்கு டத்தை ;
அந்தமில் புகழான் அன்பின்
ஆற்றலை அறிந்த வள்ளல்
சிந்தைதான் களித்துப் பெற்றே
சீர்மிகும் அறங்கள் செய்தார். (16)

அறம்வளர் சாலை கண்டார் ;
அங்கதன் மருங்கி னேர்பால்
நிறைமணல் பரப்பி வைத்தார்
‘ நின்றெதிர் கேட்க நாணும்
குறைவிலா மான முள்ளோர்
குறிக்கஅம் மணல்மீது’ என்றும்
அறம்பல செய்தா ரென்றால்
அவர்புகழ் அறைதற் பாற்றோ ! (17)

—கோ. வில்வபதி

## அருஞ்சொல் விளக்கம்

1. கண்ணியம் - மேன்மை ; நண்ணிடும் - அடையும்; வறிஞர் - வறுமையுடையவர் ; நயந்து - விரும்பி.

2. ஒருவிடாது - விடாமல் ; விழா - திருவிழா ; நிருபன் - அரசன்.

3. வயோதிகன் - கிழவன் ; சிந்தைசெய்யாது - மனத்திலும் எண்ணாமல்.

4. மனைக்கொண்டுய்த்தும் - வீட்டிற்கு அழைத்துச் சென்றும் ; அருந்திட - உண்ண.

5. உறுநோய் - மிக்கநோய் ; கனிவு - இரக்கம் ; கண் இமை போல - கண்ணை இமை காப்பதுபோல் ; இனைவுறும் - துன்புறக் கூடிய.

6. திடம் - உறுதி ; கோயிற்கண்டு - கோயிலில்கண்டு ; நண்ணிலன் - வரவில்லை.

7. வள்ளல் - புண்ணியகோட்டி; நாளை உடுக்க எண்ணிய ஆடை - மறுநாள் உடுப்பதற்காக நினைத்திருந்த புதிய ஆடை.

8. மனை - மனைவி ; உண்டவர் - விருந்தினர் ; இணங்கிய- மனமொத்த.

9. உறங்க - தூங்க ; செய்வன - செய்யவேண்டிய செயல்கள் ; கப்பிய - மிக்க.

10. புலர்ந்த பின்னர் - விடிந்தபிறகு ; தொழுந்தகை - போற்றத்தகுந்த ; துன்பவெள்ளம் - துன்பமாகியவெள்ளம் ; அகம் - மனம்.

11. எழில் - அழகு ; நன்மை + நயம் - நன்னயம் - சிறப்பாக ; செப்பம் - சீர்திருத்தம் ; நயம் - விருப்பம் ; புவி - பூமி ; பல + நலம் = பன்னலம். பார்த்திபன் - அரசன்.

12. இலகுறும் - விளங்கும் ; அலகில்சீர் - அளவில்லாத பெருமையுடைய.

13. அளி - கருணை ; நளிர்சுரம் - குளிர்சுரம்.

14. சிந்தையில் - மனத்தில் ; செழிக்க - வளர்க ; எம் + திருமனை - எந்திருமனை. இயம்பினேன் - கூறினேன்.

15. முனிவிலாது - வெறுப்பில்லாமல் ; நுந்தம் - உம்முடைய.

16. எம் + திரு + அனையீர் - எம்முடைய செல்வம்போன்றவரே ; அந்தம் + இல் - குறைவில்லாத.

17. மருங்கின் ஓர்பால் - பக்கத்தில் உள்ள ஓரிடத்தில் ; குறிக்க - எழுதிவைக்க ; அறைதற்பாற்றே - கூற முடியுமோ ?

புண்ணியகோட்டி முதலியார் தம்மிடம்வந்து கேட்க வெட்கப்படுகின்றவர்கள் மணலில் எழுதினால் அதன்மூலம் அவர்கள் விருப்பத்தை அறிந்து அவர்கட்கு வேண்டிய பொருள்களை வழங்கிவந்தார்.

## வினாக்கள்

1. புண்ணிய கோட்டி முதலியாரிடம் பொருந்திய உயர் குணத்தை விளக்குக.

2. வயோதிகனுக்கு நேர்ந்த துன்பம் யாது ? அதனை யார் எங்ஙனம் நீக்கினர் ?

3. காஞ்சி வேந்தன் கடமை மறவாதவன் என்பதை விளக்கும் நிகழ்ச்சி யாது ?

4. 'நண்ணிலன் பொன்னை வாங்க'—யார் ? ஏன் ?

5. கணவனும் மனைவியுமாக வந்தவர் யாவர் ? அவர்களை முதலியார் எங்ஙனம் உபசரித்தார் ?

6. ஊரார் காஞ்சிப் பார்த்திபற்கு உணர்த்தியது என்ன? இதனுல் நீங்கள் அறிந்து கொள்ளுவது யாது?

7. காஞ்சி நல்லான் புண்ணிய கோட்டி முதலியாரை ஏன் அழைப்பித்தனன்?

8. அரசன் புண்ணியகோட்டி முதலியாரின் அருங் குணத்தை எங்ஙனம் புகழ்ந்தான்?

9. முதலியார் அறச்சாலையில் மணல் பரப்பிவைத்திருந்த மைக்குக் காரணம் யாது?

## பயிற்சி

1. பிரித்தெழுதுக :—கண்ணியப்பெரியார், அவ்வூர், நல் விழா, கண்ணிமை, அந்தவாறு, முனிவிலாது.

2. சேர்த்து எழுதுக:–புண்ணியம் + பதி ; நன்மை + அறம்; இன்ன + ஆறு ; முன்பு + ஒரு ; பொன் + குடம் ; எம் + திரு.

3. மழைநாள் நிகழ்ச்சியைப் புலவரே கூறுவதுபோல எழுதுக.

4. பிறர்க்கு உதவிய வேறு ஒருவரின் அருஞ் செயலைப் பற்றிப் பதினைந்து வரிகள் எழுதுக.

# VI. பல் சுவை

## அற்பம் அற்ப மன்று

வான்குருவி யின்கூடு வல்லரக்குத் தொல்கறையான்
தேன்சிலம்பி யாவர்க்குஞ் செய்யரிதால்—யாம்பெரிதும்
வல்லோமே யென்று வலிமைசொல வேண்டாங்காண்
எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது. (1)

—ஔவையார்

## ஆடையின் சிறப்பு

மேலாடை யின்றிச் சவைபுகுந் தாலிந்த மேதினியோர்
நூலா யிரம்படித் தாலுமெண் ணுர்நுவல் பாற்கடலோ
மாலா னவரணி பொன்னுடை கண்டு மகளைத்தந்தே
ஆலாலம் ஈந்தது தோலாடை சுற்றும் அரன்தனக்கே!
(2)

—நையாண்டிப் புலவர்

## பாம்பும் எலுமிச்சம் பழமும்

பெரியவிட மேசேரும் பித்தர்முடி யேறும்
அரியுண்ணு முப்புமே லாடும்—எரிகுணமாம்
தேம்பொழியும் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்புமெலு மிச்சம் பழம். (3)

—காளமேகப் புலவர்

## காக்கும் கடவுள்

சோனையும் காத்துநல் லானையும் காத்துத் துரோபதைதன்
தானையும் காத்தடைந் தானையும் காத்துத் தட்த்தகலி
மானையும் காத்தனு மானையும் காத்து மடுவில்விழும்
ஆனையும் காத்தவ னேஎனைக் காப்ப தரிதல்லவே. (4)

—அந்தகக் கவி வீரராகவ முதலியார்

## பாக்கு வெட்டியின் பயன்

விறகு தறிக்கக் கறிநறுக்க
வெண்சோற்றுப்புக் கடகுவைக்கப்
பிறகு பிளவு கிடைத்ததென்ருல்
நாலா ருகப் பிளந்துகொள்ளப்
பறகு பறகென் றேசொறியப்
பதமா யிருந்த பாக்குவெட்டி
இறகு முளைத்துப் போவதுண்டோ
எடுத்தீ ராயிற் கொடுப்பீரே. (5)

——இராமசந்திர கவிராயர்

## இளந் தமிழனுக்கு

அன்பிஞேடு அறிவு சேர்ந்த
ஆண்மை வேண்டும் நாட்டிலே
அச்சமற்ற தூய வாழ்வின்
ஆற்றல் வேண்டும் வீட்டிலே
இன்பமான வார்த்தை பேசி
ஏழை மக்கள் யாவரும்
எம்முடன்பி றந்த பேர்கள்
என்ற எண்ணம் வேண்டுமே
துன்பமான கோடி கோடி
சூழ்ந்து விட்ட போதிலும்
சோறுதின்ன மானம் விற்கும்
துச்ச வாழ்வு தொட்டிடோம்
என்பதான நீதி யாவும்
இந்த நாட்டி லெங்கணும்
இளந்தமிழா ! என்றும் நின்று
ஏடெ டுத்துப் பாடுவாய். (6)

—நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளை

## எழுத்தறிவித்தலின் சிறப்பு

இன்ன றுங்கனிச் சோலைகள் செய்தல்
இனிய நீர்த்தண் சுனைக ளியற்றல்
அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆல யம்பதி னாயிரம் நாட்டல்
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர்வி ளங்கி யொளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கொ ரேழைக் கெழுத்தறி வித்தல். (7)

—பாரதியார்

### ஆசிரியர் குறிப்புக்கள்

1. ஔவையார்: இவர் தமிழ் நாட்டில் தலை சிறந்த பெண்பாற்புலவர்; மூதுரை, நல்வழி போன்ற பல நூல்களையும் இயற்றியுள்ளார்; பல தனிப் பாடல்களும் பாடியவர். காலம் கி. பி. 12-ஆம் நூற்றாண்டு.

2. நையாண்டிப்புலவர்: இவர் நகைச்சுவை ததும்பப் பாடுவதில் வல்லவர். இவருடைய பெயரே அதனை விளக்கும். காலம்: 19-ஆம் நூற்றாண்டு.

3. காளமேகப் புலவர்: இவர் இயற்பெயர் வரதன் என்பதாம். இவர் திருவானைக்காவில் வாழ்ந்துவந்தார். நீருண்ட கரிய மேகம் மழை பொழிவதுபோல விரைந்து கவிபாடும் ஆற்றல் உடையவர் ஆதலால் இவர் காளமேகம் என்று பெயர் பெற்றார்; வேடிக்கையாகப் பாடுவதிலும் இருபொருள்படச் சிலேடையாகப் பாடுவதிலும் வல்லவர். காலம்: கி. பி. 16-ஆம் நூற்றாண்டு.

4. அந்தககக்கவி வீரராகவ முதலியார்: இவர் தொண்டைமண்டலத்தில் உள்ள பூதூரில் பிறந்தவர்; பிறவிக் குருடராயினும் தம் முயற்சியால் கல்வி கற்றுப் பெரும் புலவரானவர். இவர் பல நூல்களையும் எழுதியுள்ளார். காலம்: 17-ஆம் நூற்றாண்டு.

5. இராமசந்திர கவிராயர்: இவர் தொண்டை நாட்டில் உள்ள இராசா நல்லூரில் பிறந்தவர். காலம்: 19-ஆம் நூற்றாண்டு.

6. **நாமக்கல் இராமலிங்கம்பிள்ளை :** இவர் தற்போது வாழ்ந்துவரும் சிறந்த கவிஞர்களில் ஒருவர் ; நாமக்கல் என்னும் ஊரில் வாழ்ந்துவருகிறார் ; சென்னை அரசவைக் கவிஞராக உள்ளார். இவர் பாடல்கள் இனிமையும் எளிமையும் உடையவை ; நாட்டுப்பற்றை ஊட்டக்கூடியவை.

## அருஞ்சொல் விளக்கம்

1. வான் - சிறந்த ; அரக்கு - குளவிக்கூடு ; கறையான் - கறையான் புற்று ; தேன் - தேனடை ; சிலம்பி - சிலந்திக்கூடு.

2. சவை - சபை ; மேதினி - உலகம் ; நுவல் - புகழ்ந்து கூறப்படும் ; மால் - திருமால் ; பொன் ஆடை - பீதாம்பரம் ; மகள் - இலக்குமி ; ஆலாலம் - ஆலகாலவிடம்.

3. பாம்பு - மிகுந்த விஷத்தையுடையது ; சிவபெருமான் தலையில் ஆபரணமாக விளங்குவது ; காற்றை உணவாகக் கொள்வது ; பருத்திருக்கும் ; மேலே படமெடுத்து ஆடும் ; சீறுங் குணமுடையது. எலுமிச்சம்பழம் : உயர்ந்தோரைக் காண்பவரால் கொண்டு தரப்படும் ; பைத்தியம் பிடித்தவர் தலையில் தேய்க்கப் படும் ; இரண்டாக நறுக்கப்படும் ; ஊறுகாயாக இருக்கையில் உப்புப் பூத்திருக்கும் ; எரியும் குணமுடையது.

பெரியவிடம் - பெரிய + விடம் ; பெரிய + இடம் ; அரியுண்ணும் - அரி உண்ணும் : காற்றை உண்ணும் ; அரியுண்ணும் : அறுக்கப்படும் ; தேம் - தேன் ; வரை - மலை.

4. சோனை - பெருமழை ; ஆன் - பசுக்கள் ; தானை-சேலை ; அடைந்தான் - விபீடணன் ; தடத்து - வழியில் ; அகலிமான் - அகலிகை யெனும் கௌதமரின் மனைவி ; ஆனை - கஜேந்திரன். இப்பாடலின் ஆனை என்னும் சொல் பல பொருள்களில் வந்தமை காண்க.

5. தறிக்க - வெட்ட ; அடகுவைத்தல் - அடைமானமாக ஒரு பொருளை வைத்தல் ; பிளவு - பாக்கு ; நாலாறு - நாலும் ஆறும் (சிறு துண்டுகள்) ; பறகு பறகு - ஒலிக்குறி ; பதமாய் - பக்குவமாய்.

6. துச்ச வாழ்வு - இழிந்த வாழ்க்கை ; தொட்டிடோம் - மனத்தாலும் நினைக்கமாட்டோம் ; எங்கணும் - எங்கும்.

7. இன்னறும் கனி - இனிய சுவையும் மணமும் உள்ள பழங்கள் ; சுனை - குளம் ; ஆலயம் - கோயில் ; நாட்டல் - கட்டுதல் ; ஒளிர - ஒளி வீசும்படி ; அன்ன - போன்றவை.

## வினுக்கள்

1. எல்லோரும் செய்வதற்கு அரியன எவை?

2. வான்குருவியின் கூடு - என்னும் பாடல் உணர்த்தும் நீதி என்ன?

3. பாற்கடல் சிவபெருமானுக்கு ஆலகாலம் அளித்ததற்கு ஆசிரியர் யாது காரணம் கூறுகிருர்? இதனுல் நாமறியும் உண்மை யாது?

4. பாம்பு எவ்வாறு எலுமிச்சம் பழமாகும்? ஒற்றுமையை விளக்குக.

5. 'எனைக் காப்பது அரிதல்வே,' என்பதற்குப் புலவர் காட்டும் காரணங்கள் யாவை?

6. பாக்கு வெட்டியின் பயன்கள் யாவை?

7. இளைஞர் கடமைகள் என ஆசிரியர் குறிப்பன எவை?

8. நாடெங்கும் எந்த நீதியைப் பரப்புதல் வேண்டும்?

9. ஏழைக்கு எழுத்தறிவித்தல் எவற்றினும் சிறந்தது?

## பயிற்சி

1. பிரித்தெழுதுக:—தொல்கறையான், பாற்கடல், பொன்னுடை, நல்லானை, பதமாயிருந்த, அச்சமற்ற, நாட்டிலெங்கணும், பதினுயிரம்.

2. பாம்புக்கும் எலுமிச்சம் பழத்துக்கும் சிலேடை. இங்ஙனம் சிலேடைப் பொருள் உள்ள மற்றெரு செய்யுள் கூறுக.

3. கீழ்க்கண்ட வரலாறுகளைக் கேட்டு அறிக : 1. பாற்கடல் ஆலகாலம் ஈந்தமை, 2. கண்ணபிரான் மழையைக் காத்தமை, 3. துரௌபதியின் மானம் காத்தமை, 4. கஜேந்திரனைக் காத்தமை.

4. இக்கதைகளில் ஒன்றை இருபது வரிகளில் எழுதிப் பழகுக.


147803

# MOOVAR TAMIL VACHAKAM

BOOK II FOR FORM II

GENERAL COURSE

By

Vidwan G. VILVAPATHY
Vidwan M. S. VENKATACHARI
&
T. R. SRINIVASAN, B.A., B.T.






*Price Re. 1/-*